# அருமை நபீ

## ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

உர்தூ மூலம் :

மௌலானா [illegible] ஹை பாரூகீ (ரஹ்)

[illegible]ழில் :

மௌலவீ. அ. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூசுஃபீ

வெளியீடு :

தாஜ் பப்ளிஷர்ஸ்

சிந்தாமணிப்பட்டி

# அருமை நபீ

## ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

★★★

**உர்தூ மூலம் :**

**மௌலானா அப்துல் ஹை பாரூகீ (ரஹ்)**

**தமிழில் :**

**மௌலவீ. அ. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூசுஃபீ**

★★★

வெளியீடு :

**தாஜ் பப்ளிஷர்ஸ்**

பள்ளிவாசல் தெரு,

**சிந்தாமணிப்பட்டி**

கரூர் மாவட்டம்.

முதற் பதிப்பு : ஹிஜ்ரீ 1429, ஷஃபான்
கி.பி. 2008, ஆகஸ்ட்

ரூ. 12.00

கிடைக்குமிடம் :

**தாஜ் பப்ளிஷர்ஸ்**
பள்ளிவாசல் தெரு,
**சிந்தாமணிப்பட்டி**
கரூர் மாவட்டம்.
செல் : 94438 82814

**அல்மதனீ பிரிண்டிங் ஒர்க்ஸ்,**
தென்னூர் ஹைரோடு பள்ளிவாசல்,
**திருச்சி - 17.** செல் : 94435 30025

# முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! ஸலவாத் நபிபெருமானாருக்கே!

அன்புள்ளவர்களே!

பள்ளப்பட்டி மக்தூமிய்யா அரபிக்கல்லூரியில் மூன்றாம் ஆண்டு மாணவர்களுக்கு டில்லி ஜாமிஆ மில்லிய்யா கல்லூரியில் திருக்குர்ஆன் விரிவுரையாளராக இருந்த பன்னூல் ஆசிரியர் மௌலானா காஜா அப்துல் ஹை பாரூகீ (ரஹ்) என்ற பெரியார் எழுதிய 'ஹமாரே ரசூல்' என்ற உர்து நூலை படித்துக் கொடுக்கும் பாக்கியம் கிடைத்தது. அதைத் தமிழாக்கம் செய்து நம் தமிழ் மக்களுக்கும் கொடுத்தால் மிகப்பயனாக அமையும் என பல தடவை உள்ளம் கூறி வந்தது. எதற்கும் ஒரு நேரம் வரவேண்டும் அல்லவா? அல்லாஹுதஆலா இப்போதுதான் தவ்பீக் செய்தான். அருமை நபீ என்ற பெயரில் உங்கள் கரங்களின் இடம் பெற்றுள்ளது.

அல்ஹம்துலில்லாஹ்!...

இது சிறியதாக இருந்த போதிலும் கடலை கூஜாவில் அடைத்தது போன்று இருப்பதை நீங்களே உணர்வீர்கள். இதை குர்ஆன் மத்ரஸா மாணவ, மாணவிகளுக்கும், ஓரியண்டல் ஸ்கூல் மாணவ, மாணவிகளுக்கும் துணைப் பாடமாக வைத்து போதித்தால் மிகமிக பயன் ஏற்படும். பிஞ்சு உள்ளங்களில் நம் நபி முஹம்மது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின்மீது அன்பு ஏற்படும். உண்மை முஸ்லிமாக வாழ்ந்து உண்மை முஸ்லிமாக இவ்வுலகைவிட்டு பிரிய வாய்ப்பு ஏற்படும். இன்ஷா அல்லாஹ்...

அல்லாஹ் இச்சிறுநூலை கபூல் செய்வானாக!

இதைப் படிப்பவர்கள் எமக்காக துஆ செய்யும்படி வேண்டிக்கொள்கிறேன்.

வஸ்ஸலாம்.

**மௌலவீ. அ. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூசுஃபீ**

மக்தூமிய்யா அரபிக் கல்லூரி, பள்ளப்பட்டி

ஹிஜ்ரீ 1427 சபர் 12-3-2006 ஞாயிறு

# உள்ளே

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

## பிறப்பு

நம் நபியின் பெயர் முஹம்மத் (ஸல்) இன்னும் ஒரு பெயர் அஹ்மத் (ஸல்) தந்தையின் பெயர் அப்துல்லாஹ். பாட்டனாரின் பெயர் அப்துல் முத்தலிப். தாயின் பெயர் ஆமினா. ரபீஉல் அவ்வல் மாதம் பிறை 9 கி.பி. 571 ஏப்ரல் 20-ம் தேதி திங்கள்கிழமை மக்காவில் பிறந்தார்கள். ரபீஉல் அவ்வல் பிறை 12-ல் பிறந்தார்கள் என்றுதான் பிரபலமாகி உள்ளது. நம் நபி அவர்களின் பெற்றோருக்கு ஒரே மகனாவார்கள். இவர்கள் பிறப்பதற்கு முன்பே தந்தை மரணமாகி விட்டார்கள். பாட்டனார்தான் வளர்த்தார்கள். இவர்களை கஃபாவுக்கு எடுத்துச் சென்று துஆ செய்து வந்தார்கள். ஏழாம் நாள் ஆடு அறுத்து எல்லா மக்களுக்கும் விருந்து கொடுத்தார்கள். இந்த பிள்ளையின் பெயர் என்ன என்று மக்கள் கேட்டதற்கு 'முஹம்மத்' (புகழப்படுபவர்) என்றார்கள். எனது இந்தப் பேரன் முழு உலகத்தவர்களின் புகழுக்கும் தகுதியுடையவராக திகழவேண்டும் என நான் விரும்புகிறேன் என்றார். எட்டாம் நாள் அரபுநாட்டு வழக்கப்படி ஹலீமா சஃதிய்யா (ரலி) அவர்கள் பால் குடிப்பாட்ட தன் கோத்திரத்திற்கு கொண்டு சென்றார்கள். நபிகளார் அங்கு நான்கு ஆண்டுகள் இருந்தார்கள். அங்கிருந்தபோது அதிகமாக ஆடுகளை மேய்ப்பதற்காகச் சென்றார்கள். ஆறு வயதான போது தாய் மரணமானார்கள். எட்டு வயதாக இருந்தபோது பாட்டனாரும் மரணமானார்கள். சிறிய தகப்பனார் அபூதாலிப் நபிகளாரை வளர்க்க ஆரம்பித்தார்கள். தன் பிள்ளைகளைக்கூட பொருட்படுத்தாமல் நபிகளாரை நேசித்தார்கள்.

## வியாபாரம்

நம் நபிக்கு தந்தையிடமிருந்து எந்த சொத்தும் கிடைக்கவில்லை. அவர்களின் சிறிய தந்தை வியாபாரியாக இருந்தார். பெரும்பாலான குரைஷிகள் வியாபாரம் தான் செய்தார்கள். உண்மையாகப் பார்த்தால் வியாபாரம் தான் நல்ல சுதந்திரமான தொழிலாக இருக்கிறது. சம்பாதித்து நாமும் சாப்பிட்டு மற்றவர்களுக்கும் கொடுத்து உதவி ஊழியம், பணிவிடை செய்யலாம். இதனால்தான் நம் நபி வாலிபரானதும் வியாபாரம் செய்ய எண்ணம் வந்தது. சிறிய தந்தையுடன் சேர்ந்து பல பயணம் செய்துள்ளனர். எல்லா வித அனுபவங்கள், வியாபார நுணுக்கங்களும் தெரிந்துவிட்டது.

ஜனங்கள் பொதுவாக லாபத்தில் கூட்டாக்கி தனது முதலீட்டை வியாபாரம் செய்வதற்காக கொடுப்பது வழக்கமாக இருந்தது. நம் நபியின் நம்பிக்கை நாணயம் நாலாபக்கமும் பிரபல்யமாகி இருந்தது. மக்காவில் புத்திசாலித்தனமான செல்வம் நிறைந்த விதவைப்பெண் ஒருவர் இருந்தார். அவர் பெயர் கதீஜா. அவரின் தந்தையின் பெயர் குவைலித். இவர் குரைஷி குலத்தின் தலைவர்களில் ஒருவராக இருந்தார். அன்னை கதீஜா தனது வியாபாரப் பொருளை நம்பகமான ஒருவரிடம் ஒப்படைத்து சிரியா, யமன் நாடுகளுக்கு அனுப்பி வைப்பவராக இருந்தார். நம் நபியின் நம்பகத்தன்மையை அறிந்து நீங்கள் வியாபாரம் செய்து கொடுத்தால் பிறருக்கு கொடுப்பதைப்போல் இரு பங்கு தருகிறேன் என்று நம் நபியிடம் கூறினார்கள். நம் நபியும் அதை ஏற்று வியாபாரம் செய்து நல்ல லாபத்துடன் திரும்பி வந்தார்கள். இப்பயணத்தில் அன்னை கதீஜாவுடைய ஆண் அடிமை மய்ஸரா என்பவரும் உடன் சென்றிருந்தார். இதனால் நம் நபியின் நற்பண்புகளை உயர்ந்த பழக்கங்களைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. திரும்பி வந்து தன் எஜமானியிடம் தெரியப்படுத்தினார்.

இதையெல்லாம் கேள்விப்பட்டு நபிகளாரை திருமணம் செய்ய விரும்பி மணமுடித்துக் கொண்டார்கள். அப்போது அன்னை கதீஜா (ரலி)யின் வயது 40. நம் நபியின் வயது 25. திருமணத்திற்குப்பின் 25 ஆண்டுகள் வாழ்ந்தார்கள்.

அன்னை கதீஜா மரணமானபிறகு அவ்வப்போது அவர்களின் நற்குணங்கள் பற்றி கூறிக்கொண்டிருந்தார்கள். வியாபாரிக்கு முக்கியமாக இருக்க வேண்டிய பண்புகளில் வாக்கு மாறாமை, கொடுக்கல் வாங்கலில் நேர்மை, வாக்கு சுத்தமாக இருத்தல் அவசியம். இவ்வனைத்தும் நம்நபியிடம் இருந்தது. நபியாவதற்கு முன் ஒருநாள் ஒருவர் ஒரு நாளைக்குறித்து ஓர் இடத்திற்கு வரும்படி நபிகளாரிடம் கூறிச் சென்றார். நபிகளார் அவ்விடம் சென்று அவரை எதிர்பார்த்தார்கள் மூன்று நாள்வரை அவர்வரவில்லை. அதற்குப்பிறகு அவர் வந்தார். இதற்காக நம் நபி கோபிக்கவில்லை. எனக்கு சிரமம் கொடுத்து விட்டீர் என்று மட்டும் கூறினார்கள். பிள்ளைகளே! நம் நபியின் இப்படிப்பட்ட உயர்ந்த குணங்களால் எல்லோரும் நம்பிக்கை வைத்தார்கள், நபிகளாரை உண்மையாளர் என புகழ்ந்தார்கள்.

## அமைதிக்கு முயற்சி

நம் நபி உலகில் அமைதியை, சமாதானத்தை உருவாக்க தூது கொண்டு வந்தார்கள். அரபு நாட்டில் அம்மக்களுக்கு அமைதி இல்லை. நடைபாதைகள் அபாயம் நிறைந்ததாக இருந்தது. பயணிகளிடம் கொள்ளையடிப்பது, ஏழைகளுக்கு அநீதியிழைப்பது சர்வசாதாரணமாக நிகழ்ந்தது.

இந்த தீங்குகளையெல்லாம் ஒழிக்க மக்காவின் சில வாலிபர்கள் ஒரு சங்கம் அமைத்தார்கள். நம் நபியும் அதில் இணைந்து கொண்டார்கள். அந்த சபையில் அவர்கள் எடுத்துக் கொண்ட உறுதிமொழிகள் இதுதான்.

- ❖ நம் நாட்டில் அமைதி ஏற்படுத்துவோம்
- ❖ பயணிகளைப் பாதுகாப்போம்
- ❖ இயலாதவர்களுக்கு அநீதி செய்ய விடமாட்டோம்
- ❖ ஏழைகளுக்கு உதவுவோம்
- ❖ மக்காவில் எந்த அநியாயக் காரனையும் விட்டு வைக்க மாட்டோம்

நம் நபியின் நற்குணங்களால் எல்லோரும் நம்பிக்கை யாளர் என்று நம் நபியை அழைக்கலானார்கள். நபிகளாரிடம் யாரேனும் ஒரு தடவை பழகினால் போதும்; ஆயுள் முழுவதும் நபிகளாரைப் புகழ்வார்கள்.

ஒருதடவை நடந்த நிகழ்ச்சி, கஃபாவின் சுவர் இடிந்து விட்டது. குரைஷிகள் அதைக்கட்ட நாடினார்கள் - அதற்காக எல்லா பொருட்களையும் சேர்த்தார்கள் - இது அல்லாஹ்வுடைய வீடாக இருப்பதால் எல்லோரும் மதிப்பு வைத்தனர். எனவே எல்லோரும் பரகத்தைப் பெறநாடி ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் ஒவ்வொரு நபரை தேர்ந்தெடுத்து வேலையில் பங்குபெறச் செய்தனர். ஹஜருல் அஸ்வத் கல்லை யார் வைப்பது என்பது பற்றி கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இறுதியாக யார் முதலாவதாக பைத்துல்லாஹ்வில் நுழைகிறாரோ அவர் சொல்வதைக் கேட்டு செயல்படலாம் என முடிவு ஏற்பட்டது. இறைநாட்டம் பாருங்கள்! முதலில் நுழைந்தது நம்நபிதான். நம்பகமானவர் நுழைந்து விட்டார் என எல்லோரும் மகிழ்ந்தார்கள். நம் நபி சொன்னதாவது:- ஒவ்வொரு கோத்திரத்திலிருந்து ஒவ்வொரு நபரை தேர்ந்தெடுத்து ஒரு போர்வையில் கல்லை வைத்து எல்லோரும் சேர்ந்து தூக்கி வைக்கலாம். அப்படியே செய்தனர்.

## முதல் வசனம்

மக்காவிலிருந்து மூன்று மைலில் ஹிராகுகை உள்ளது. அது 4 கஜம் உயரம் 2 ¾ அகலம் கொண்டது. நம் நபி தண்ணீர்

உணவு எடுத்துக் கொண்டு அதிகமாக அங்கு சென்று இறைதியானத்தில் ஈடுபட்டு வந்தார்கள். இந்த சமயங்களில் அவர்களுக்கு கனவு ஏற்பட்டது. பகலில் அது அப்படியே நடைபெறும். நாற்பதாவது வயதில் ஒருநாள் ரமளான் பிறை 18 வெள்ளி இரவு ஜிப்ரயீல் (அலை) வந்து ஓதுவீராக என கூறினார்கள். பெருமானார் அவர்கள் எழுதப் படிக்க தெரியாதவராக இருந்தனர். அல்லாஹ் அவர்களுக்கு அல்குர்ஆனை இறக்கி வைத்தான். எல்லா கல்விகளுக்கும் திறவுகோலாக குர்ஆன் திகழ்கிறது. மனிதர்களுக்கு வழிகாட்டியாக திகழ்கிறது. இதற்குப்பிறகு ஜிப்ரயீல் (அலை) நம்நபிக்கு ஒளுசெய்து காட்டி தொழ பழக்கினார்கள். இதற்குப் பிறகு வீடு திரும்பி நடந்ததை அன்னை கதீஜா நாயகியிடம் கூறி பயமாக உள்ளது என போர்வை போர்த்தி படுத்துக்கொண்டார்கள். அன்னை கதீஜா ஆறுதல் கூறினார்கள். பயப்படாதீர்கள் நீங்கள் தருமம் செய்கிறீர்கள்; ஏழைகளுக்கு உதவுகிறீர்கள்; விருந்தினரை உபசரிக்கிறீர்கள்; ஜனங்களின் கவலையில் பங்கு கொள்கிறீர்கள்: அல்லாஹ் உங்களுக்கு எந்த குறையும் வைக்கமாட்டான். இதற்குப்பின் தனது சொந்தக்காரரான வரகா என்ற அறிஞரிடம் அழைத்துச் சென்றார். நடந்ததை கூறியதும் அவர் கூறியது: உங்களிடம் வந்தவர் வானவர் கோமான் ஜிப்ரயீல்தான்; நீங்கள் தீர்க்கதரிசியாகிவிட்டீர். இதைக் கேள்விப்பட்டால் மக்கள் மறுப்பார்கள்; சிரமம் கொடுத்து ஊரை விட்டே விரட்டுவார்கள். அப்பொழுது நான் உயிருடன் இருந்தால் உமக்கு உதவுவேன்.

## முதல் முஸ்லிம்

மக்களுக்கு இறைக்கட்டளையை எத்திவைப்பது நம் நபியின் வேலையாகும். நம் நபியின் தூதைக்கேட்டு முதல்முதலாக இஸ்லாத்தை ஏற்றவர்கள் பெண்களில் அன்னை கதீஜா (ரலி) சிறுவர்களில் ஹஜ்ரத் அலீ (ரலி). அடிமைகளில் ஹஜ்ரத் ஜைத் (ரலி). வயதானவர்களில் ஹஜ்ரத் அபூபக்கர்(ரலி). இவர்களின் முயற்சியால் பலரும் இஸ்லாத்தை ஏற்றார்கள்.

## மலையில் செய்த உபதேசம்

மூன்று வருடத்திற்குப் பின் தன் சொந்தக்காரர்களுக்கு இறைத்தூதை எத்தி வைக்க அல்லாஹ் கட்டளையிட்டான். நம் நபி சபா மலையில் ஏறி மக்காவின் அனைத்து மக்களையும் அழைத்தார்கள். எல்லோரும் ஒன்றுகூடிய பிறகு சொன்னார்கள்; என்னை நீங்கள் உண்மையாளர் என்று கருதுகிறீர்களா? பொய்யர் எனகருதுகிறீர்களா? அவர்கள் கூறினார்கள்; நீங்கள் இது வரை பொய் சொன்னது இல்லை. நீங்கள் நம்பிக்கையானவர் உண்மையாளர் என்றார்கள். நபிகளார் கேட்டார்கள். நான் மலைமேலே இருக்கிறேன். அந்தப்பக்கமிருந்து ஒரு ஆயுதம் தாங்கியபடை வருகிறது என்று கூறினால் என்னை நம்புவீர்களா? அவர்கள் 'சந்தேகமின்றி நம்புவோம்' என்றார்கள். அப்படி என்றால் நான் சொல்வதைக் கேட்டு நம்புங்கள். மரணம் உங்கள் தலைமீது நிற்கிறது. நீங்கள் ஒருநாள் அல்லாஹ்வுக்கு முன் நின்று பதில் சொல்ல வேண்டியது வரும். நீங்கள் ஈமான் கொள்ளாவிட்டால் பல கடுமையாக வேதனை ஏற்படும். இதைக்கேட்டு கோபமாகி எல்லோரும் சென்றுவிட்டனர். அதில் நபியின் சிறிய தந்தை அபூலஹபும் இருந்தார். இதன்பிறகு நாற்பது நபர் வரை முஸ்லிம்களாகி இருந்தார்கள். நம் நபி ஒருநாள் கஃபாவிற்கு சென்று அல்லாஹ் ஒருவன் என அறிவிப்புச் செய்தார்கள். இதைக் கேட்டு விரோதிகள் நம் நபியை அடித்து உதைத்தார்கள். இதையறிந்த ஹஜ்ரத் ஹாரிஸ் இப்னுஅபீஹாலா பாதுகாக்க விரைந்தார்கள். இதைப்பார்த்து விரோதிகள் நபியை விட்டுவிட்டு ஹாரிஸாவை அடித்து வாளால் கொன்றுவிட்டார்கள். இஸ்லாத்திற்காக உயிர் விட்ட முதல் மனிதராகும் இவர்.

## உபதேசங்கள்

நம் நபி தெருக்கள் கடைவீதிகளில் சென்று உபதேசம் செய்தார்கள். ஒரே இறைவனை நம்புங்கள்; அவனையே

வணங்குங்கள். பெண் குழந்தைகளை கொல்லாதீர்கள், தீய வேலைகள் செய்யாதீர்கள், சுத்தமாக இருங்கள், தீய வார்த்தை பேசாதீர்கள். வாக்குறுதியை நிறைவேற்றுங்கள், ஏமாற்றாதீர்கள். வானம், பூமி, சூரியன், சந்திரன், வானவர், நபி எல்லாவற்றையும் அல்லாஹ்தான் படைத்தான். அல்லாஹ்தான் நோயாளிகளுக்கு சுகமளிக்கிறான். நம் தேவைகளைப் பூர்த்தி செய்கிறான். நம் பிரார்த்தனைகளை ஏற்கிறான். அல்லாஹ்வின் நாட்டம் இல்லாமல் எதுவும் நடக்காது.

## குரைஷிகளின் விரோதம்

குரைஷிகள் முதலில் மௌனமாக இருந்தார்கள். நம் நபி உபதேசம் செய்யத் துவங்கியதும் அவர்களுக்கும் அவர்களின் தோழர்களுக்கும் துன்பங்கள் கொடுக்க ஆரம்பித்தார்கள். நடக்கும் பாதைகளில் முட்களைப்போட்டு வைத்தார்கள். நபியின் வீட்டு வாசலில் அசுத்தங்களை எறிந்தார்கள். ஒரு நாள் நம் நபி பைத்துல்லாஹ்வில் தொழுது கொண்டிருந்தார்கள். சஜ்தாவுக்குச் சென்றதும் ஒருவன் கழுத்தில் கயிற்றைப்போட்டு இழுத்தான். இதனால் நம் நபியின் கழுத்து நெறிந்துவிட்டது. அப்படியே மயங்கி விட்டார்கள். இந்த நேரத்தில் அங்கு ஹஜ்ரத் அபூபக்கர்சித்தீக் (ரலி) வந்து விட்டார்கள். அவர்களைப் பலரும் சேர்ந்து அடித்து உதைத்தார்கள். இப்படித்தான் மற்றொரு தடவை நம் நபி தொழுது கொண்டிருக்கும்போது தங்களின் உயிர்விரோதி அபூஜஹ்ல் வந்தான். ஒட்டகக் குடலை கொண்டு வரச்செய்து நம் நபிசஜ்தாவிற்கு சென்றதும்முதுகில் போட்டான். இதைப் பார்த்து பலரும் சிரித்தார்கள். இறுதியாக அன்னை பாத்திமா (ரலி) அங்கு வந்து அதை அகற்றி இப்படி செய்வது உங்களுக்கே நன்றாக உள்ளதா என புரிய வைத்தார்கள். இது தவிர இன்னும் நிறைய தொல்லைகள் கொடுத்தார்கள். இஸ்லாத்தை மனமுவந்து ஏற்க வருபவர்களிடம் நம் நபிபற்றி இல்லாததும் பொல்லாததும் சொல்லி விரட்டினார்கள்.

இந்த சிரமங்களை பொறுமையாகயிருந்து உறுதியுடன் நம் நபியும் சஹாபாக்களும் சகித்துக் கொண்டனர்.

## நம் நபியின் நண்பர்கள்

நம் நபி சிரமங்களை சகித்துக் கொண்டது போல் அவர்களுடைய நண்பர்கள் தோழர்கள் சிரமங்களை சகித்துக்கொண்டு இஸ்லாத்தில் உறுதியுடன் இருந்தார்கள். ஹஸ்ரத் பிலால் (ரலி) அவர்கள் இஸ்லாமான செய்தி கேட்டு அவரின் எஜமான் அவர்களின் கழுத்தில் கயிற்றைக்கட்டி சிறு பிள்ளைகளின் கையில் அக்கயிற்றைக் கொடுத்து இழுத்துக்கொண்டு செல்லவைத்தான். மக்காவின் கொதிக்கும் மணலில் படுக்க வைத்தான். நெஞ்சில் சூடான கல்லை தூக்கி வைத்தான். கம்பியால் கட்டி, குச்சியால் அடித்தான். பட்டினியாகப் போட்டான். இஸ்லாத்தை விட்டுவிடு என்றான். ஆனால் அவர்கள். அல்லாஹ் ஒருவன், அல்லாஹ் ஒருவன் என்றே குரல் கொடுத்தார்கள். இதையறிந்த ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை விலைக்குவாங்கி அல்லாஹ்வுக்காக உரிமை விட்டார்கள். ஹப்பாப் (ரலி) என்பவர் முஸ்லிமானதும் குறைஷிகள் பல சிரமங்கள் கொடுத்தனர். ஒரு நாள் கொதிக்கும் கங்குகளை பூமியில் போட்டு அதில் மல்லாக்க படுக்க வைத்தார்கள். ஒருவன் நெஞ்சில் கால் வைத்து திரும்பாமல் இருக்க அமுக்கிக் கொண்டான். அம்மார் (ரலி) இவரின் தந்தை யாசிர் (ரலி) தாய் சுமைய்யா (ரலி) மூவரும் முஸ்லிமானதும் அபூஜஹ்ல் அடித்து உதைத்தான். சுமைய்யாவை (ரலி) ஈட்டியால் குத்திக்குத்தி சாகடித்தான். அஃப்லஹ் (ரலி) என்ற சஹாபியின் காலில் கயிற்றைக் கட்டி சுடு கற்களில் இழுத்துச் சென்றார்கள். உஸ்மான் (ரலி) அவர்கள் இஸ்லாம் ஆனதும் இவர்களின் சிறிய தந்தை இதையறிந்து பேரித்தமர நாரில் கட்டி தொங்கபோட்டு கீழே புகை போட்டார். முஸ்அப் (ரலி) இஸ்லாம் ஆனதும் அவர்களின் தாய் வீட்டை விட்டு வெளியாக்கினார்கள். ஜின்னீரா (ரலி) என்ற

அடிமைப்பெண்மணி இஸ்லாம் ஆனதும் ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களை அடித்தார். பிறகுதான் ஹஜ்ரத் உமர் இஸ்லாத்திற்கு வந்தார்கள். அபூஜஹ்ல் ஜின்னீராவை (ரலி) அடித்து கண்ணை நோண்டினான். பார்வை போய்விட்டது. லீனா (ரலி) என்ற அடிமைப் பெண்மணி இஸ்லாம் ஆனதும் உமர் தனது கை வலிக்கும் வரை சிறிது மூச்சு வாங்கி கொண்டு அடிக்கிறேன் எனக்கூறி பிறகும் அடித்தார். இவ்வளவு சிரமங்களையும் இறைவனுக்காக சகித்து கொண்டார்கள்; இஸ்லாத்தை விடவில்லை.

## அபிசீனியாவிற்கு குடி பெயர்தல்

குரைஷிகள் முஸ்லிம்களுக்கு சொல்லொணா துன்பங்களைக் கொடுத்தார்கள். கஃபாவில் குர்ஆன் ஓதக்கூட விடுவதில்லை. ஒருதடவை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கஃபா சென்று அர்ரஹ்மான் சூராவை ஓதினார். மக்கள் அவர்களின் முகத்தில் அடித்தார்கள். முஸ்லிம்கள் நிம்மதியாக வாழக்கூட முடியவில்லை. இதையெல்லாம் பார்த்த நம் நபி முஸ்லிம்கள் வேறு ஊருக்கு சென்று வாழலாம் என அனுமதி கொடுத்தார்கள். 11 ஆண்களும் 4 பெண்களும் ஹிஜ்ரத் செய்தார்கள். இதற்கு பிறகு 83 ஆண்களும் 18 பெண்களும் அபிசீனியா நாட்டுக்கு ஹிஜ்ரத் செய்தார்கள். அங்கு நிம்மதியாக இருக்கலானார்கள். குரைஷிகளுக்கு இது பிடிக்கவில்லை. அபிசீனியாவிற்கு ஒரு குழுவை அனுப்பி அங்குள்ள நஜ்ஜாஷீ என்ற அரசரிடம் சென்று அவருக்கு விலையுயர்ந்த அன்பளிப்புகளைக் கொடுத்து எங்களுடைய குற்றவாளிகளை எங்களிடம் ஒப்படையுங்கள் என்றார்கள். அரசர் முஸ்லிம்களை அழைத்து விசாரித்தார். அப்பொழுது ஹஜ்ரத் ஜஅஃபர் (ரலி) அவர்கள் விபரமாக கூறலானார்கள். அரசரே! மனிதத்தன்மை என்றால் என்னவென்று எங்களுக்குத் தெரியாமலிருந்தது. சமத்துவ எண்ணம் எங்களிடம் இல்லை. இந்த நிலையில் அல்லாஹ் நபியை

அனுப்பினான். அவர்கள் உண்மையாளராக இருந்தார்கள். அல்லாஹ் ஒருவன் எனவும் அவனுக்கு இணை கிடையாது என்றும் சொன்னார்கள். மேலும் அவர்கள் சொன்னது... உண்மை பேசுங்கள், வாக்கை நிறைவேற்றுங்கள் பாவம் செய்யாதீர்கள் தொழுங்கள். நோன்பு வையுங்கள் என்றார்கள். இது எங்கள் சமுதாயத்திற்கு பிடிக்கவில்லை. அவருக்கு சொல்லொணா தொல்லைகளைக் கொடுத்தார்கள். அதைத் தாங்க முடியாமல் நாங்கள் இங்கு வந்து பாதுகாப்பாக உள்ளோம். இதைக் கேட்ட அரசர், கொஞ்சம் திருக்குர்ஆனை ஓதிக்காட்டுங்கள் என்றார். ஹஜ்ரத் ஜஅஃபர் (ரலி) அவர்கள் மர்யம் சூராவை ஓதினார். அரசரும் அரசவையில் இருந்த அனைவரும் அதைக்கேட்டு அழுதார்கள். மேலும் சொன்னார்கள்; எங்களின் நபி ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்கள் முன் அறிவிப்புச் செய்த நபிதான் அந்த முஹம்மத் (ஸல்). அவர்களின் காலத்தை அடையச் செய்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இதற்குப்பின் குரைஷி குழு தந்த அன்பளிப்புகளை திருப்பிக் கொடுத்து நாட்டை விட்டு வெளியேற்றி விட்டார்.

## குரைஷிகளின் நப்பாசை

அபிசீனியாவில் ஒத்துழைப்பு கிடைக்கவில்லை என்பதை அறிந்த குரைஷிகள் ஆசையூட்டி பணிய வைக்க நாடி, மக்காவின் ஒரு பிரபல தலைவர் உத்பா என்பவரை நம் நபியிடம் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் பேசியது : - எனது தம்பி மகன் முஹம்மதே! உனக்கு செல்வம் வேண்டுமானால் செல்வம் தருகிறோம். தலைமைப் பதவி வேண்டுமானால் தங்களை தலைவராக்கு கிறோம். எது வேண்டுமானாலும் தருகிறோம். நீ உமது கொள்கை, பிரச்சாரத்தை விட்டுவிடும்! இல்லை என்றால் உமக்கு மூளை கெட்டுவிட்டது என்றால் உமக்கு மருத்துவம் பார்க்கின்றோம் என்றார். நம் நபி நவின்றார்கள்; நீங்கள் என்னைப் பற்றிச்சொன்ன எதுவும் உண்மையில்லை. செல்வம், பதவி எதையும் நான் விரும்ப

வில்லை. எனக்கு பைத்தியமும் இல்லை. நான் யார் என்று இப்பொழுது நான் ஓதப்போகும் வசனங்களைக் கேளுங்கள். தெரிந்து கொள்வீர்கள் என்று கூறி பிறகு நபியவர்கள் ஒரு சூராவின் சில வசனத்தை ஓதினார்கள். உத்பா அமைதியாக தன்னை மறந்து கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு குரைஷிகளிடம் சென்று சொன்னதாவது!.

நீங்கள் முஹம்மதை ஒன்றும் சொல்லாதீர்கள். அவர் போக்கில் அவர் போகட்டும் என்றார். இதற்குப்பிறகு முழு வம்சத்தின் தலைவர்களும் நம்நபியின் சிறிய தந்தை அபூதாலிபிடம் வந்து சொன்னார்கள். நாங்கள் தங்களை மிக மதிக்கிறோம். தங்களின் சகோதரர் மகன் நம்முடைய சாமிகளை வணங்க வேண்டாம் என்று கூறுகிறார். எவ்வளவோ நாங்கள் சொல்லியும் அவர் பிரச்சாரத்தை விடவில்லை. நீங்களாவது அவரிடம் கூறி அவரை அமைதியாக இருக்கச் சொல்லுங்கள். அப்படி அவர் அமைதியாக இல்லாவிட்டால் நாங்கள் அவரை அடித்துவிடுவோம். பிறகு உங்களால் எங்களை எதுவும் செய்ய முடியாது.

இதற்குப் பிறகு அபூதாலிப் நம் நபியை அழைத்து அன்பாக விஷயத்தைச் சொன்னார், அதைக் கேட்டு நம்நபி சொன்னதாவது; என்வலது கையில் சூரியனையும் இடது கையில் சந்திரனையும் வைத்தாலும் நான் செய்யும் தஃவத் பணியை விடமாட்டேன். அல்லாஹ்வுடைய கட்டளைகளில் ஓர் எழுத்தைக்கூட குறைக்கவோ கூட்டவோ மாட்டேன். இதற்காக என் உயிர் போனாலும் சரியே என்றார்கள். இதற்குப் பின் அழுது கொண்டு எழுந்து சென்று விட்டார்கள். அபூ தாலிப் இதைப்பார்த்து நம் நபியை திருப்பி அழைத்துச் சொன்னார்கள். எனது சகோதரன் மகனே! உன் மனம் விரும்புவதைச் செய், நான் உமக்கு உதவியாக இருந்து வருவதை ஒரு போதும் விடமாட்டேன் என்றார்.

## ஹஜ்ரத் ஹம்ஜாவும் ஹஜ்ரத் உமரும்

ஒருமுறை நம் நபி சபா மலையில் இருக்கும் போது அபூஜஹ்ல் அங்கு வந்து பெருமானாரை திட்டினான். கல்லை எடுத்து எறிந்தான். இதனால் இரத்தம் வடிந்தது. இதையறிந்த இவர்களின் சிறிய தந்தை ஹள்ரத் ஹம்ஜா அபூஜஹ்லுடைய தலைமீது அம்பெய்தார். பிறகு நம் நபியிடம் வந்து உமக்காக பழி வாங்கி விட்டேன் என்றார். நம் நபி சொன்னார்கள். இதனால் எனக்கு மகிழ்ச்சி இல்லை. நீங்கள் முஸ்லிமானால்தான் எனக்கு மகிழ்ச்சி! இதைக் கேட்டதும் ஹள்ரத் ஹம்ஜா முஸ்லிம் ஆகிவிட்டார். இதற்கு மூன்று நாளைக்குப் பின் ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள். முஸ்லிமானார்கள். அதன் விபரம் வருமாறு : ஒருநாள் நம்நபியை கொலை செய்ய நாடி வழியில் சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவருடைய சகோதரியும் சகோதரியின் கணவரும் முஸ்லிமாகிவிட்டனர் என தெரியவந்தது. நேராக அங்கு சென்று இருவரையும் நன்றாக அடித்தார். அடிவாங்கிய சகோதரி சொன்னார்; எந்த வேதத்தை நாங்கள் நம்பியுள்ளோமோ அதைக் கேளுங்கள். பிறகு நீங்கள் எது வேண்டுமானாலும் செய்யுங்கள் என்றார். அங்கு ஒருசஹாபியும் இருந்தார். அவர் உமரைப் பார்த்ததுமே மறைந்துகொண்டார். பின்னர் வந்து தாஹா சூராவின் முதல் ருகூஃவை ஓதிக்காட்டினார். இதைக்கேட்டு ஹள்ரத் உமர் (ரலி) தேம்பித் தேம்பி அழுதார். பிறகு நேராக நபிகளாரிடம் சென்று கலிமா சொல்லி முஸ்லிமாகிவிட்டார்கள். பெருமானாரின் நெருங்கிய நண்பரானார். பிற்காலத்தில் நாட்டை ஆளும் ஜனாதிபதியாகி விட்டார்கள்.

## ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்

எவ்வளவு துன்பம் கொடுத்தும் இஸ்லாமிய பிரச்சாரத்தை முஹம்மது (ஸல்) அவர்கள் விடவில்லை. எனவே எல்லா சொந்த

பந்தங்களும் அவரிடம் எந்த தொடர்பும் வைக்க வேண்டாம். எந்தப் பொருளும் அவருக்கு விற்கக்கூடாது. நம் தெருவில் நடக்க விடக்கூடாது என்று முடிவெடுத்து எழுதி பைதுல்லாஹ்வில் அதை தொங்கவிட்டார்கள். இதையறிந்த நம் நபியும் முஸ்லிம்களும் ஊரைவிட்டு ஒதுங்கி அபூதாலிப் கணவாயில் தங்கினார்கள். மூன்று ஆண்டுகள் அங்கு கஷ்டப்பட்டார்கள். குழந்தைகள் பசியால் அழுத குரல் தூரமாக கேட்டது. உணவில்லாத சமயம் சிலர் மரத்தின் இலைதழைகளைச் சாப்பிட்டு உயிர் வாழ்ந்தார்கள். ஹள்ரத் இப்னு அபீவக்காஸ் (ரலி) கூறுவது; ஒருதடவை பசியால் வாடிய போது இரவு காய்ந்த தோல் ஒன்று கிடைத்தது. அதை நீரில் கழுவி நெருப்பில் சுட்டு சாம்பலாக்கி நீரில் கலந்து சாப்பிட்டேன். ஹஜ் சமயங்களில் நம் நபி அங்கு வருபவர்களுக்கு மார்க்க பிரச்சாரம் செய்தார்கள். இதைக் கவனித்த அபூஜஹ்ல் அந்த மக்களிடம் இவர் பைத்தியக்காரர் இவர்பேச்சைக் கேட்காதீர்கள். அவர் பேச்சை கேட்டால் நீங்கள் அழிந்துபோய்விடுவீர்கள் என்று கூறினான்.

இறுதியாக கஃபாவில் தொங்கவிடப்பட்ட உறுதிமொழிப் பத்திரத்தை கரையான் அரித்து விட்டது. மூன்று வருடத்திற்குப் பின் அந்தக் கணவாயிலிருந்து வெளியேறினார்கள். மக்களிடம் உபதேசம் செய்தார்கள். இதற்கிடையில் அபூதாலிப் மரணமானார். மூன்று நாளுக்குப்பின் அன்னை கதீஜா (ரலி) அவர்கள் மரணமானார்கள். இதனால் நம் நபி கவலையடைந்தார்கள். அபூதாலிப் இஸ்லாம் ஆகவில்லை. என்றாலும் நம் நபிக்கு உதவியாக இருந்தார்கள். அன்னை கதீஜா முதல் முஸ்லிம். நம் நபியின் சொற்படி தன் செல்வங்களை அர்பணித்தார்கள். இதற்குப்பின் விரோதிகள் நம் நபிக்கு அதிகம் தொல்லை கொடுத்தார்கள். ஒரு தடவை நம்நபியின் தலையில் சேற்றை வாரி வீசினார்கள். நம் நபி அப்படியே வீட்டுக்கு வந்தார்கள். நம் நபியின்மகளார் அன்னை பாத்திமா அழுது கொண்டே நம் நபியின் தலையைக் கழுவி சுத்தம் செய்தார்கள். அப்பொழுது நம்நபி

கூறியதாவது: எனது பிரியத்திற்குரிய மகளே! ஏன் அழுகிறாய்? உமது தந்தையை அல்லாஹ் பாதுகாப்பான் என்றார்கள்.

## தாயிபுக்கு பயணமாகுதல்!

இப்பொழுது வெளிப்படையான எந்த ஆதரவும் நம் நபிக்கு இல்லை. இருப்பினும் நம் நபி ஊக்கத்துடன் பிரச்சாரம் செய்து வந்தனர். தாயிபுக்குச் சென்றார்கள். உடன் ஜைதுப்னு ஹாரிஸ் (ரலி) இருந்தார். வழியில் சந்திக்கும் அனைத்து வம்சத்தினர்களுக்கும் உபதேசம் செய்தனர். தாயிபில் உள்ள தலைவர்களுக்கு இது பிடிக்கவில்லை. நம் நபியை மரியாதை இல்லாமல் திட்டினார்கள். உன்னை விட்டால் நபியாக்க இறைவனுக்கு வேறு ஆள் கிடைக்க வில்லையா? என்றனர். இதற்குப் பிறகு அந்த தலைவர்கள் ரவுடிகளை தூண்டிவிட்டனர். அவர்கள் நம் நபியின் தலைமீது கற்களைவிட்டு எறிந்தார்கள். இதனால் இரத்தம் வடிந்தது. ஒரு தடவை அடிபட்டு காயங்கள் ஏற்பட்டு மயக்கமுற்று விழுந்து விட்டார்கள். ஜைது (ரலி) தன் முதுகில் தூக்கி வந்து தண்ணீரை தெளித்தார்கள். பிறகுதான் உணர்வு வந்தது. தீனுக்காக இப்படித்தான் நபிமார்கள் கஷ்டப்பட்டார்கள். நபிஇப்ராஹீம் (அலை) அவர்களை நெருப்பில் போட்டார்கள். ஹள்ரத் மூஸா (அலை) அவர்களுக்கு பிர்அவ்ன் கொலை மிரட்டல் விட்டான். ஹள்ரத் ஈஸா (அலை) அவர்களுக்கு யூதர்கள் சொல்லொணா தொல்லை கொடுத்தார்கள்.

## மிஃராஜ்

துன்பங்களும், கஷ்டங்களும் நபிமார்களின் அந்தஸ்த்தை உயர்த்துகிறது. குரைஷிகள் நம் நபியை இழிவு படுத்துவதில் மகிழ்ச்சியடைந்தனர். அல்லாஹ் அவர்களின் அந்தஸ்த்தை உயர்த்தினான். நபிப்பட்டம் கிடைத்த 10-ஆம் ஆண்டில் ரஜப் பிறை 27ல் மிஃராஜ் பயணம் மேற்கொண்டார்கள். ஹள்ரத் ஜிப்ரயீல்

(அலை) அவர்கள் நம் நபியை பைத்துல் முகத்தஸிற்கு அழைத்துச் சென்று அங்கிருந்து வானங்களைக் கடந்து கூட்டி சென்று அல்லாஹ்வை சந்திக்க வைத்தார்கள். அல்லாஹ் ஐந்து நேர தொழுகையை கொடுத்தனுப்பினான். ஒரே இரவில் இது நடைபெற்றது.

## துபைல் இப்னு அம்ருத்தவ்ஸீ :

தவ்ஸ் கிளையின் தலைவர் துபைல் பெரும் கவிஞராகவும், அறிவாளியாகவும் இருந்தார். அவர் வருகிறார் என்றால் குரைஷிகள் மக்காவிற்கு வெளியே சென்று வரவேற்று மிக கண்ணியம் செய்வார்கள். ஒருமுறை அவரிடம் இங்கு ஒரு சூனியக்காரர் உருவாகியுள்ளார். அவர் குடும்பங்களில் பிரிவை ஏற்படுத்துகிறார். அவரை சந்திக்க வேண்டாம் அவர்பேச்சை கேட்க வேண்டாம். சந்தித்தால் உங்கள் குடும்பங்களிலும் பிரிவு உருவாகி விடும் என்றனர். இதன்படி அவர் காதில் பஞ்சை வைத்து அடைத்து கொண்டு கஃபாவுக்கு வந்து போனார். ஒருநாள் கஃபா வரும்போது நம் நபி தொழுது கொண்டிருந்தார்கள். அவர் நம் நபியின் கிராஅத்தை கேட்டு விட்டார். பெருமானாரிடம் சென்று அவர்களின் பேச்சைக் கேட்டு முஸ்லிமாகிவிட்டார். குரைஷிகள் இதைக் கேள்விப்பட்டு கவலையடைந்தனர்.

## அந்த நபி

நபிப்பட்டம் கிடைத்து 11-வது ஆண்டு மக்காவிலிருந்து சில மைலுக்கு அப்பால் சிலமக்கள் மதீனாவிலிருந்து வந்திருப்பதாக கேள்விப்பட்டு அங்கு வந்து இஸ்லாமிய பிரச்சாரம் செய்தார்கள். அவர்கள் ஏற்கனவே யூதர்களிடம் இறுதி நபிவருவார் என்ற செய்தியை கேள்விப்பட்டு இருந்தார்கள். எனவே நம் நபியின் அழைப்பை ஏற்று முஸ்லிம் ஆகிவிட்டனர். அவர்களின் ஊர் திரும்பி இதுபற்றி கூறினார்கள். இதற்கு அடுத்த வருடம் மதீனாவிலிருந்து

12 நபர்கள் மக்கா வந்து முஸ்லிமாகி சென்றார்கள். அப்பொழுதுச் அவர்கள் சொன்னார்கள்; நாங்கள் ஒரே இறைவனான அல்லாஹ்வை வணங்குவோம்; இணைவைக்க மாட்டோம்; தீய செயல் செய்யமாட்டோம். பெண் பிள்ளைகளை கொல்லமாட்டோம். கோள் சொல்லவோ, இட்டுக்கட்டவோ மாட்டோம்.

இவர்கள் திரும்பிச் செல்லும் போது இவர்களுக்கு மார்க்க போதனை செய்ய உடன் ஹள்ரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களை நம் நபி உடன் அனுப்பி வைத்தனர். ஹள்ரத் முஸ்அப் (ரலி) பெரும் செல்வந்தராகவும் வீட்டு செல்லப்பிள்ளையாகவுமிருந் தார்கள். வசதி வாய்ப்புடன் வாழ்ந்தவர். இப்போது சாதாரண உடைஉடுத்தி மதீனா செல்கிறார். அப்போது சட்டையில் பட்டனுக்கு பதில் முள்ளை குத்தியிருந்தார்.

## இஸ்லாத்தின் மையம்

ஹள்ரத் முஸ்அப் (ரலி) அவர்கள் மதீனா வந்து ஒரு கண்ணியமான தலைவர் சஃத் என்பவர் வீட்டில் தங்கினார்கள் (ரலி). அதை மையமாக வைத்து வீடுவீடாகச் சென்று இஸ்லாமிய அழைப்புப் பணி செய்தார்கள். இந்த உழைப்பால் அன்சாரிகளின் அனைத்து வம்சத்திலும் இஸ்லாம் பரவ ஆரம்பித்தது. ஒரே வருடத்தில் 27 ஆண்களும் இருபெண்களும் இஸ்லாமானார்கள். இவர்கள் மக்கா வந்து, மதீனாவுக்கு வரும்படி நம் நபிக்கு அழைப்புக் கொடுத்தார்கள். என்ன! எனக்கு தீன் பணி செய்ய ஒத்துழைப்பாக இருப்பீர்களா? எங்களை உங்களின் மனைவி மக்களைப்போன்று பாதுகாப்பீர்களா? என்று நபியவர்கள் கேட்டார்கள். இதற்கு அவர்கள் எங்களுக்கு என்ன பயன் கிடைக்கும்? என்றார்கள். இறைதிருப்தியும், சொர்க்கமும் கிடைக்கும் என நபிகளார் சொன்னார்கள். எங்களுடனே எப்பொழுதும் நிரந்தரமாக இருந்துவிடுங்கள் என்று அவர்கள் சொன்னார்கள். நம் நபி சொன்னார்கள்: எனது வாழ்வும், மரணமும் உங்களுடன் தான். நான் உங்களுடையவன். நீங்கள்

என்னுடையவர்கள். இதைக் கேட்டு அவர்கள் மகிழ்ச்சி யடைந்தார்கள். இதன்பின் முஸ்லிம் ஆகும் எல்லோரையும் நம் நபி மதீனாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.

## சுஹைப் ரூமீ (ரலி)

முஸ்லிம்களுக்கு மக்காவை விட்டுச் செல்வதும் சுலபமாக இருக்கவில்லை. ஹஜ்ரத் சுஹைப் ரூமீ (ரலி) செல்லும் போது குப்பார்கள் அவர்களைச் சுற்றிக் கொண்டார்கள். இங்கு வரும்போது ஏழையாக வந்தாய்; இங்கு வந்து நன்றாக சம்பாதித்துக் கொண்டாய் - எல்லா செல்வத்தையும் இங்கிருந்து கொண்டு செல்ல விடமாட்டோம் என்றார்கள்.

நீங்களே வைத்துக் கொள்ளுங்கள் என்று எல்லா செல்வங்களையும் விட்டு விட்டு வெளியேறினார்கள். இதைக் கேள்விப்பட்ட நம் நபி சொன்னார்கள். சுஹைப் ரூமீ (ரலி) இப்படி செய்ததால் நிறைய மறுமைப் பயனை சம்பாதித்துக் கொண்டார்.

## அபூசலமா

ஹஜ்ரத் உம்முஸலமாவும் அவரின் கணவரும்-மகனும் மூன்று பேரும் ஒரு ஒட்டகத்தில் ஏறிச் செல்ல நாடிய போது உம்மு ஸலமாவுடைய வமிசத்தினர் வந்து உங்களை விட்டு விடுவோமா? என்று; தடுத்தார்கள், மனைவி, மக்களை விட்டுவிட்டு அபூஸலமா மட்டும் ஹிஜ்ரத் செய்தார்கள்.

## கொலை செய்ய ஆலோசனை

மதீனாவில் முஸ்லிம்களின் செல்வாக்கு பெருகி இஸ்லாம் வளர்ந்து வருவதை பார்த்து பயந்து முஸ்லிம்கள் நம்மீது தாக்குதல் நடத்துவதை அஞ்சி இஸ்லாத்தை அழித்து விட வேண்டும் என கருதி மக்கா குறைஷிகள் தலைவர்கள் ஒன்று கூடி ஆலோசனை செய்து

முஹம்மதைக் கொலை செய்வதற்கு இதை விட வேறு நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது என முடிவு செய்தனர். ஆனால் எப்படி கொலை செய்வது என்பது பற்றி பல கருத்து நிலவியது. அபூஜஹ்ல் கூறிய ஒரு திட்டத்தை எல்லாரும் ஏற்றனர். அதாவது குறைஷிகளின் பிரபலமான ஒவ்வொரு வமிசத்திலிருந்து ஒவ்வொரு வாலிபர்களும் ஒன்று சேர்ந்து முஹம்மதின் வீட்டைச் சுற்றி நின்று கொள்ள வேண்டும் - சுப்ஹு தொழ வெளியே வரும்போது எல்லோரும் அவரைக் கொன்றுவிட வேண்டும். இப்படிச் செய்வதால் தனிப்பட்ட எந்த வமிசத்திற்கு குற்றம் வராது. முஹம்மது உடைய வமிசமும் பழிக்குப் பழி வாங்க முன் வரமாட்டார்கள். இந்த திட்டப்படி ஒரு இரவு எல்லா வாலிபர்களும் வாள் எடுத்துக்கொண்டு நம் நபியின் வீட்டைச் சுற்றி நின்று கொண்டார்கள்.

## நம் நபியின் ஹிஜ்ரத்

அல்லாஹ் நம் நபிக்கு இதைத் தெரிவித்து மக்காவை விட்டு மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்யும்படி உத்தரவிட்டான். நம் நபியவர்கள் தம்மிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த அமானிதப் பொருட்களை திருப்பித் தருவதற்காக ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களை தன் வீட்டில் விட்டுவிட்டு புறப்பட்டார்கள். யாஸீன் சூரா ஓதியவாறு வெளியேறினார்கள். விரோதிகள் நம் நபியைப் பார்க்க முடியவில்லை. இந்த நிகழ்ச்சி நபியாகி 13 வருடம் கி.பி. 633 டிசம்பர் - 13 வியாழன் இரவு நடந்தது.

நம் நபி தன் வீட்டிலிருந்து ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்று அவர்களையும் உடன் அழைத்து கொண்டு 'தவ்ர்' குகைக்குள் சென்று மூன்று இரவுகள் தங்கினார்கள். நான்காவது இரவு ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் வீட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட இரு பெண் ஒட்டகைகளில் ஏறி ரபீஉல் அவ்வல் பிறை-1 திங்களன்று

புறப்பட்டார்கள். ரபீஉல் அவ்வல்-8 அன்று 'குபா' என்ற இடத்தை அடைந்தார்கள். மூன்று நாள் அங்கு தங்கினார்கள். அங்கு ஒரு பள்ளிவாசலைக் கட்டினார்கள். ரபீஉல் அவ்வல் - 12 வெள்ளிக்கிழமை அன்று 100 நபர்களுடன் அங்கு ஜும்ஆ தொழவைத்தார்கள்.

பிறகு மதீனாவுக்குள் நுழைந்தார்கள். அப்பொழுது நபியை வரவேற்று அன்சாரி சிறுமிகள் கவி பாடினார்கள். எனது வீட்டில்தான் தங்க வேண்டும் என ஒவ்வொருவரும் விரும்பினார்கள். இதையறிந்த நம் நபி சொன்னார்கள். எனது ஒட்டகம் யார் வீட்டிற்கு முன் நிற்கிறதோ அங்கு தங்குவேன் என்றார்கள், அதேபோல் ஹஜ்ரத் அபூஅய்யூப் (ரலி) அவர்களின் வீட்டில் முன் ஒட்டகம் படுத்துக் கொண்டது, எனவே அங்கு ஏழு மாதங்கள் வரை தங்கினார்கள். மதீனாவில் முதல் வேலையாக பள்ளிவாசல் கட்டினார்கள். நபிகளாரும், ஸஹாபாக்களும், சேர்ந்து வேலை செய்தார்கள். சுடாத செங்கல் சுவர் பேரித்த மரத்தால் தூண்கள் - அதன் ஓலை, கூரை - தரையில் ஒன்றும் போடவில்லை. மழை பெய்தால் சேறாகிவிடும். இந்த மஸ்ஜிதே நபவியை சுற்றி அறைகள் கட்டினார்கள். அதில் தன் மனைவிகளை குடிவைத்தார்கள்.

## சகோதர தொடர்பு

மக்காவிலிருந்து மதீனாவுக்கு சென்றவர்களுக்கு முஹாஜிர் என்றழைக்கப்படும். அங்கு அவர்களுக்கு வீடு - காடு எதுவும் இல்லை. மதீனா வாசிகளுக்கு அன்சாரிகள் எனப்படும். முஹாஜிர்களுக்கு அன்சாரிகள் உதவி செய்தனர். சகோதர பாசத்துடன் இருந்தனர். அன்சாரிகள் தன் சொத்தில் பாதியை தன் முஹாஜிர் சஹாபிக்கு கொடுக்கலானார்கள்.

## அமைதியின் முதல் முயற்சி

நம் நபி முதலாம் ஆண்டே முஸ்லிம்களும் யூதர்களுடன் ஒற்றுமையாக வாழ்வதை உறுதி செய்ய ஓர் ஒப்பந்தம் செய்தனர்.

பத்திரத்தில் எழுதப்பட்ட சில முக்கிய நிபந்தனைகள் :-

1. முஸ்லிம்களும், யூதர்களும் ஒரே சமுதாயம்

2. அவர் அவர் மதத்தில் அவர் இருக்கலாம். யாரும் யாருக்குமே சிரமம் தரக் கூடாது.

3. ஒருவரின் மீது அநியாயமாக யாராவது போர் தொடுத்தால் இரு சமுதாயமும் உதவி செய்ய வேண்டும்.

4. மதீனாவின் மீது யாரும் தாக்குதல் நடத்தினால் எல்லோரும் சேர்ந்து தடுக்க வேண்டும்.

5. உடன்பாடு செய்ய வேண்டியது ஏற்பட்டால் எல்லோரும் அதற்கு உடன்பட வேண்டும்.

6. மதீனாவில் யாருடைய இரத்தமும் சிந்தக்கூடாது.

7. எல்லா பிரச்சனைகளுக்கும் இறுதித் தீர்ப்பு நபிகளார் செய்வார்கள்.

மக்காவில் இருக்கும் போது தொழுகை இரண்டு ரக்அத்கள் மட்டும் தான் கடமையாக இருந்தது. மதீனா வந்ததும் லுஹர், அஸர், இஷாவில் இரண்டு ரக்அத்கள் சேர்ந்து நான்காக ஆக்கப்பட்டது. பயணத்தில் இரண்டு ரக்அத்கள் தொழுதால் போதுமானது எனவும் சட்டம் வந்தது.

## மக்கா - மதீனா

நம் நபி 13 வருடம் மக்காவில் இருந்தனர். குறைஷிகள் விரோதிகளாக இருந்தனர். மதீனா வந்த பிறகு பல விரோதி

உருவாகிவிட்டனர். யஹூதிகள் ஒப்பந்தம் செய்திருந்தாலும் ஏமாற்றிக் கொண்டிருந்தனர். இஸ்லாத்தை ஒழிக்க முயன்றனர். இவர்களைத் தவிர முனாபிக்களும் இஸ்லாத்திற்கு விரோதமாக செயல்பட்டனர்.

## பத்ரு யுத்தம்

நம் நபி மதீனா வந்ததும் மக்கா குறைஷிகள் மதீனா வாசிகளுக்கு கடிதம் எழுதினர். நீங்கள் பெருமானாரைக் கொலை செய்யாவிட்டால் நாங்கள் உங்கள் மீது தாக்குதல் நடத்துவோம் என்று எழுதினர். நம் நபி அமைதி ஏற்படுத்த எவ்வளவோ முயற்சி செய்தும் பலன் இல்லை. இறுதியாக ஹிஜ்ரீ இரண்டாம் ஆண்டு பத்ரு யுத்தம் நடந்தது. 1000 நபர்களுடன் குறைஷிகள் பத்ருக்கு வந்தனர். நம் நபிகளாருடன் சிறுவர்களும் வர துடித்தனர். பெருமானார் தடுத்து விட்டார்கள். உமைர் இப்னு அபீவக்காஸ் என்ற சிறுவரை தடுத்தும் அவர் அழுதார். இறுதியாக அவரை நபிகளார் அனுமதித்தார்கள். நம் படையில் மொத்தம் 313 நபர்கள் இருந்தனர். இரண்டு குதிரைகள் அறுபது ஒட்டகங்கள் இருந்தது. ரமலான் 17 வெள்ளிக்கிழமை அன்று யுத்தம் நடந்தது. அல்லாஹ் நபிகளாருக்கு வெற்றியைக் கொடுத்தான். விரோதிகளில் பெரும் பெரும் சூழ்ச்சிக்கார தலைவர்கள் கொல்லப்பட்டனர். எழுபதுபேர் கைது செய்யப்பட்டனர். கைதிகளை பெருமானார் நஷ்டத் தொகை வாங்கிக் கொண்டு விடுவித்தனர். ஆடையில்லா கைதிகளுக்கு ஆடை கொடுத்தார்கள். பணமில்லாதவர்களை அன்சாரி பிள்ளைகளுக்கு எழுதப் படிக்க கற்றுத்தரச் சொல்லி விடுவித்தார்கள்.

## பாங்கு

பள்ளியில் ஒன்று கூடி ஜமாஅத்தாக தொழும் பழக்கம் இது வரை இல்லாமல் இருந்தது. மதீனாவில் ஆலோசனை செய்து ஹிஜ்ரீ

2ல் பாங்கு சொல்லும் முறையை ஏற்படுத்தினார்கள். இதே வருடம் ஜகாத்தும், ரமலான் நோன்பும் கடமையானது.

## உஹது யுத்தம்

பத்ரில் குறைஷிகள் தோற்றது குறைஷிகளுக்கு வெட்கமாக இருந்தது. சிறு கூட்டத்திடம் தோல்வியடைந்தோமே என வருத்தப்பட்டுக் கொண்டு வீடு முழுவதும் துக்கம் கொண்டாடினர். பத்ரு நடந்து மூன்று ஆண்டிற்கு பிறகு ஐயாயிரம் பேர் கொண்ட படையுடன் உஹது மைதானத்தில் ஒன்று கூடினர். முஸ்லிம்களின் விவசாயம் அனைத்தையும் அழித்தனர். மேய்க்குமிடங்களை கைவசப்படுத்திக் கொண்டனர். இதையறிந்த நபிகளார் ஆலோசனை செய்து 1000பேர் கொண்ட படையுடன் புறப்பட்டார்கள். 300 முனாஃபிக்கள் திரும்பி வந்ததால் 700 பேர்தான் மிஞ்சினார்கள். ராஃபீ என்ற சிறுவர் தன்னை பெரியவர் என காட்ட கால் பெரு விரலால் நின்று உயர்த்திக்காட்டி அனுமதி வாங்கினார். அவருடன் மல் யுத்தம் செய்து ஜெயித்து நானும் யுத்தத்திற்கு வருவேன் என சமுரா என்ற இளைஞர் அனுமதி பெற்றார், ஹிஜ்ரீ 3, ஷவ்வால் - 7ல் யுத்தம் நடந்தது. ஆனால் நமக்கு தோல்வி ஏற்பட்டது. (70) எழுபது முஸ்லிம்கள் ஷஹீதானார்கள். பெருமானாரின் நான்கு பற்கள் உடைந்தது. நெற்றி - முகம் ஆகிய இடங்களில் காயம் ஏற்பட்டது. ஒரு குகையில் விழுந்தார்கள். பாத்திமா நாயகி காயங்களை கழுவி பாயை எரித்து சாம்பலாக்கி அதை நெற்றியில் பூசினார்கள். அப்பொழுதுதான் ரத்தம் நின்றது. ஹஜ்ரத் ஆயிஷா உம்மு சுலைம் ஆகியோர் தோல் துருத்தியில் நீர் சுமந்து - காயமுற்றோர்களுக்கு குடிப்பாட்டினார்கள். இதில் சஹாபி ஆண்களும், ஸஹாபி பெண்களும் தங்களின் முழுவீரத்தையும் காட்டி ரசூலின் மீது இருந்த அன்பை நிரூபித்தார்கள்.

## சஹாபாக்களின் உயிர் தியாகம்

விரோதிகள் நம் நபியின் மீது அம்பெய்தனர். ஹஜ்ரத் தல்ஹா (ரலி) அவைகளை தன் கையால் தடுத்து நிறுத்தினர். இதனால் அவர்களின் கை செயல் இழந்துவிட்டது. நபி பெருமானார் இத்தகைய விரோதிகளுக்கு யா அல்லாஹ் இவர்களை மன்னித்துவிடு. அவர்கள் அறியாமல் உள்ளனர் என துஆ செய்தனர். விரோதிகள் பெருமானாரை சூழ்ந்து கொண்டனர். இதையறிந்த பல சஹாபாக்கள் சண்டையிட்டு உயிர் விட்டனர், அதில் நழ்ர் என்ற சஹாபி காயப்பட்டு அடையாளம் தெரியாமல் இருந்தார். அவர்களின் சகோதரி விரலைப்பார்த்து அடையாளம் காட்டினார். இதில் ஓர் அன்சாரி பெண்ணுடைய தந்தை, சகோதரர், கணவர் எல்லோருமே ஷஹீதாகிவிட்டார்கள். இச்செய்தியை அறிந்த அப்பெண் - நபிகளார் உயிருடன் உள்ளார்கள் அது போதும் என்று சொன்னார்கள்.

ஹஜ்ரத் அபூதல்ஹா (ரலி) அம்பு எய்து எய்து இரு வில் உடைந்துவிட்டது. தனது கேடயத்தை வைத்து பெருமானாரின் மீது அம்பு பட்டுவிடாமல் பாதுகாத்து வந்தார். பெருமானார் தலை உயர்த்தி பார்த்தால் தலையை உயர்த்த வேண்டாம் என்று சொல்வார்கள்.

## ஹஜ்ரத் ஹுபைப் (ரலி)

ஹிஜ்ரீ 4ல் நடந்த ஓர் நிகழ்ச்சி. நம்முடைய நபியின் ஓர் தோழர் ஹஜ்ரத் ஹுபைப் (ரலி) அவர்களை சில விரோதிகள் பிடித்துச் சென்று குறைஷிகளிடம் விற்று விட்டனர். ஹாரிஸ் என்பவரின் வீட்டில் பல நாள் பட்டினியாக, தாகமாக இருந்தார். ஒரு நாள் அவர்கள் முடிதிருத்திக் கொண்டு இருந்தார்கள். அப்பொழுது ஹாரிஸ் உடைய ஆண் குழந்தை அவர்களிடம் வந்தது. அதை தூக்கி

வைத்துக் கொண்டார். இதைப் பார்த்த குழந்தையின் தாய் சப்தமிட்டார். அப்பொழுது ஹுபைப் (ரலி) "பயப்படாதீர்; நான் இக்குழந்தையைக் கொல்லமாட்டேன். முஸ்லிம்கள் வாக்கு மாறமாட்டார்கள். மோசம் செய்ய மாட்டார்கள்" என்று கூறினார்கள்.

ஒரு நாள் குபைபை கொல்ல நாடி தூக்கு மேடைக்கு கூட்டி சென்று நீ இஸ்லாத்தை விட்டுவிடு உம்மை விட்டு விடுகிறோம் என்றார்கள். அப்பொழுது ஹுபைப் (ரலி) சொன்னார். இஸ்லாம் இல்லாமல் உயிருடன் இருப்பதில் என்ன பயன் என்றார்.

உமது இறுதி ஆசை என்ன? என்றதற்கு இரண்டு ரக்அத்கள் தொழுது கொள்கிறேன் என்றார்கள். சரி என்றார்கள். இரண்டு ரக்அத்கள் தொழுது முடித்தார். பிறகு கழுமரத்தில் ஏற்றி ஈட்டியால் குத்தலானார்கள். ஒரு கல் நெஞ்சம் படைத்தவன் ஈரலில் குத்தி நான் இருக்கும் இந்த இடத்தில் முஹம்மது இருந்தால் நல்லது என்று சொல் நான் விட்டு விடுகிறேன் என்றான். ஹுபைப் சொன்னார்கள் எனது அன்பு நபீயின் காலில் ஒரு சிறுமுள் குத்துவதைக் கூட நான் விரும்பமாட்டேன். இதற்கு பிறகு அவர் ஷஹீதானார், ஷஹீதாவதற்கு முன் சில கவிதைகளை படித்தார்.

அதனுடைய கருத்து :

1. இறைவனின் மீது ஆணையாக! இப்பொழுது இஸ்லாத்துடன் உயிர் விடுகிறேன். நான் உயிர்விட்டு எந்தப்பக்கம் விழுந்தாலும் அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை.

2. அல்லாஹ் நாடினால் எனது சதையின் ஒவ்வொரு துண்டிலும் பரகத் செய்வான்.

## யூதர்களின் முதல் அட்டூழியம்

மதீனாவில் யூதர்கள் மற்றவர்களுக்கு வட்டிக்குக் கடன் கொடுத்து அவர்களை கடனாளியாக்கி வந்தனர். கடனைத் திருப்பி

தர முடியாதவர்களின் பிள்ளைகளைப் பெற்றோர்கள் அடமானம் வைக்கச் சொல்வார்கள். ஓரிரண்டு ரூபாய் தரா விட்டாலும் கூட பாவமறியா பிள்ளைகளைப் பிடித்து கல்லால் அடிப்பார்கள். இஸ்லாம் வந்து இதை இல்லாமலாக்கிவிட்டது. இது யூதர்களுக்குப் பிடிக்கவில்லை. இஸ்லாத்திற்கு விரோதமாக செயல் படத் துவங்கினர். நபி பெருமானாரைப் பார்க்கும் போது உமக்கு மரணம் வரட்டும் என்பார்கள். பத்ருப் போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்றதைக் கண்டு பயந்தனர். இஸ்லாத்தை வளரவிடக் கூடாது என கருதினர். அவர்களில் மூன்று வமிசத்தினர் இருந்தனர். அவர்களில் ஒரு வம்சத்தினர். பானுகய்ன்காஃ முன் செய்த ஒப்பந்தங்களை முறித்து விட்டனர். இதற்கிடையில் ஒரு அன்சாரி பெண் பால் விற்பதற்காக யூதர்களின் குடியிருப்புப் பகுதிக்குச் சென்ற போது அவர்கள் அப்பெண்ணை நடுத்தெருவில் ஆடையில்லாமல் ஆக்கினர். இதைப் பார்த்த ஒரு முஸ்லிம் ரோசத்தால் அந்த யூதனை கொலை செய்தார். யூதர்கள் அந்த முஸ்லிமைக் கொலை செய்து விட்டனர். கலகத்தை ஏற்படுத்தினார்கள். ஒப்பந்தத்தை முறித்து யுத்தத்திற்கு தயாராகினார்கள். நம் நபி வேறு வழியில்லாமல் 15நாள் வரை முற்றுகை இட்டார்கள். பிறகு அவர்களை ஊரை விட்டு கைபர் என்ற இடத்திற்கு அனுப்பினார்கள். இது ஹிஜ்ரீ 2 ஷவ்வால் மாதம் நடந்தது.

## இரண்டாவது அட்டூழியம்

ஹிஜ்ரீ 4-லில் நடந்த ஒரு நிகழ்ச்சி. பெருமானார் (ஸல்) அவர்கள் யூதர்களின் ஒரு வமிசமான பனூநழீர் குடியிருப்புக்கு ஒரு விஷயமாக அவர்களின் அழைப்பின்படி சென்றார்கள். மக்கள் அவர்களை ஒரு சுவற்றுக்குக் கீழ் அமரச் செய்தார்கள். ஒரு யஹூதியை மேலே அனுப்பி நம் நபியின் மீது திருகை கல் ஒன்றை தள்ளி விட திட்டமிட்டிருந்தார்கள். அல்லாஹ் நம் நபிக்கு இதை அறிவித்து விட்டான். உடனே எழுந்து சென்று விட்டார்கள்.

இதனால் அவர்களை மதீனாவை விட்டு கைபருக்கு துரத்தினார்கள். அவர்கள் இதை எதிர்பார்த்தார்கள். தங்கள் வீடுகளை தானாக இடித்துத் தள்ளிவிட்டு ஒட்டகத்தில் பொருள்களை ஏற்றி இசை இசைத்துக் கொண்டு சென்றார்கள். இவ்வாண்டு நம் நபி ஜைது இப்னு தாபித் (ரலி) அவர்களை இப்றானி மொழியைக் கற்க கட்டளையிட்டார்கள். (ரலி) ஜைது சிறிது காலத்திலேயே அதைக் கற்றுக் கொண்டார்.

## மது ஹராமானது

அரபிகளிடம் பொதுவாக மது குடிக்கும் பழக்கம் இருந்தது. இதனால் பல பாவங்கள் செய்து கொண்டிருந்தார்கள். நம் நபி முதன்முதலாக மது பாவங்களின் தாய் என்று கூறி வந்தனர். ஹிஜ்ரீ 4-லில் மது ஹராமாகிவிட்டது.

ஹழ்ரத் அனஸ் (ரலி) கூறுவது; நாங்கள் அபூதல்ஹாவின் வீட்டில் அமர்ந்து அவருக்கு மதுவை நான் ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். மது தடையாகிவிட்டது என ஓர் அறிவிப்பு செய்யப்பட்டதைக் கேட்டு மதுவை கீழே ஊற்றிவிட்டோம். அன்று மதீனாவின் தெருக்களில் மது ஆறு போல் ஓடியது.

## கன்தக் யுத்தம்

கைபருக்குச் சென்ற பிறகு யூதர்கள் குறைஷிகளுடன் சேர்ந்து சூழ்ச்சி செய்யலானார்கள். முஸ்லிம்களுக்கு எதிராக மக்களை தூண்டி விட்டார்கள். ஹிஜ்ரீ 5-ல் 24 ஆயிரம் பேர் அடங்கிய படையுடன் மதீனாவில் தாக்குதல் நடத்தப் புறப்பட்டார்கள். இதையறிந்த நம் நபி தோழர்களுடன் கலந்து ஆலோசித்து மதீனாவின் நடுப்பக்கம் குழி தோண்ட கட்டளையிட்டார்கள். குளிர் நிறைந்த இரவுகளில் 3-நாள் பட்டினியுடன் எல்லா முஸ்லிம்களும் வேலை செய்தனர். 20 நாள்களில் வேலை முடிந்தது.

மதீனாவில் இருந்த பனூகுரைழா என்ற யஹூதி கூட்டமும் ஒப்பந்தத்தை முறித்து முஸ்லிம்களுக்கு எதிராக மதீனாவிலேயே இருந்து கொண்டு செயல்பட்டனர். முஸ்லிம்களின் எண்ணிக்கை 3 ஆயிரம் மட்டுமே. ஒரு மாதம் வரை முற்றுகையிட்டிருந்த விரோதிகள் கடும் புயல் காற்றும் கடுமையான குளிரும் வீசியதால் தாக்குப் பிடிக்க இயலாமல் ஓடிவிட்டார்கள்.

## பனூகுரைழாவின் முடிவு

இதற்கு பிறகு பனூகுரைழா கூட்டத்தினரை ஏன் இப்படி செய்தீர்கள் என விசாரிக்க நம் நபி அழைத்தார்கள். ஆனால் அவர்கள் கோட்டையை விட்டு வெளியே வரவில்லை. யுத்தம் செய்ய தயாராகிக் கொண்டிருந்தார்கள். இதையறிந்த முஸ்லிம்கள் அவர்களின் கோட்டையை முற்றுகை இட்டனர். 25 நாள் வரை இது தொடர்ந்தது. பிறகு யஹூதிகள் நாங்கள் அவ்ஸ் கிளையின் தலைவர் சஃத் (ரலி) அவர்களின் தீர்ப்புக்கு கட்டுப்படுகிறோம் என சொல்லி அனுப்பினார்கள். முற்றுகையை நீக்கப்பட்டது. யூதர்களும் வெளியே வந்தனர். ஹஜ்ரத் ஸஃத் நீண்ட ஆய்வுக்குப் பிறகு இப்படி தீர்ப்பு சொன்னார்கள்.

(1) பனூகுரைழாவில் உள்ள சண்டை செய்ய தகுதி படைத்த ஆண்களை கொன்று விட வேண்டும்.

(2) அவர்களின் பெண்கள் பிள்ளைகளை அடிமையாக்கிக் கொள்ள வேண்டும்.

(3) அவர்களின் பொருள்களை முஸ்லிம்கள் பங்கு போட்டுக் கொள்ள வேண்டும்.

இவ்விதமாக மதீனா யூதர்களின் முடிவு ஆனது.

## ஹுதைபிய்யா உடன்படிக்கை

ஹிஜ்ரீ 6ல் நம் நபி மக்கா சென்று உம்ரா செய்ய நாடி 1500 தோழர்களுடன் புறப்பட்டார்கள். இதையறிந்த மக்கா குறைஷிகள் ஒரு வாலிபர்களின் குழுவுடன் சண்டையிட தயாராகிவிட்டார்கள். நம் நபி அவர்களிடம் ஒப்பந்தம் செய்தனர்.

1. முஸ்லிம்கள் இவ்வருடம் திரும்பிப் போய்விட்டு அடுத்த ஆண்டு உம்ரா செய்ய மக்கா வரலாம்.

2. 10 ஆண்டு வரை குறைஷிகள் யாராவது முஸ்லிம் ஆகி மதீனா வந்தால் அவர்களை மக்காவுக்கு திருப்பி அனுப்பி விட வேண்டும்.

இந்த உடன்பாட்டுக்குப் பிறகு இஸ்லாம் மிக வேகமாக பரவ ஆரம்பித்தது. ஹஜ்ரத் காலித் (ரலி) அம்ருப்னு ஆஸ் (ரலி) போன்றோர்கள் இப்போது தான் முஸ்லிம் ஆனார்கள். அவர்களின் மூலம் அல்லாஹ் பெரும் வேலை வாங்கினான்.

## யூதர்களின் இறுதி அட்டூழியம்

யூதர்கள் மதீனாவை விட்டு சென்ற பிறகும் ஹிஜ்ரீ 6ல் பெரிய படையுடன் யுத்தம் செய்ய வந்தனர். இதையறிந்த நம் நபி 1600 நபர்களுடன் கைபர் என்ற இடத்திற்கு புறப்பட்டார்கள். பல நாள் யுத்தம் நடந்தது. முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்தது.

## அரசர்களுக்கு தபால் எழுதுதல்

நம் நபி முஸ்லிம்களுக்கு மட்டும் தூதரல்ல; முழு உலக மக்களுக்கும் இறுதி வழிகாட்டியாகும். எனவே பல நாட்டின் அரசர்களுக்கு தபால் எழுதி இஸ்லாத்தை எத்தி வைத்தார்கள்.

## மூத்தா யுத்தம்

தபால் கொண்டு சென்ற தூதர் ஒருவரை புஸ்ரு, நாட்டு அரசன் கொலை செய்து விட்டான். இதனால் மூத்தா என்ற இடத்தில் யுத்தம் நடந்தது. இறுதியில் முஸ்லிம்கள் பாதுகாப்பாக திரும்பினர்.

## மக்கா வெற்றி

ஹூதைபிய்யா உடன் படிக்கையை மீறி - மக்கா காஃபிர்கள் செயல்பட்டனர். இதனால் யுத்தம் உருவானது. 10 ஆயிரம் நபருடன் நம் நபி ஹிஜ்ரீ 8ல் மக்காவில் வெற்றியுடன் நுழைந்தனர்.

## ஹூனைன் யுத்தம்

ஹவாஜின் - ஸகீஃப் என இரு வமிசத்தினர்களும் முஸ்லிம்களிடம் சண்டை செய்ய தயாரானார்கள். நம் நபி 12 ஆயிரம் நபருடன் ஹூனைன் என்ற இடத்திற்குச் சென்றனர். முஸ்லிம்களுக்கு இறுதியாக வெற்றி கிடைத்தது.

## நபியின் மீது அன்பு

ஹூனைன் யுத்தத்தில் கிடைத்த பொருள்களை முஸ்லிம்களிடம் பங்கிட்டார்கள் - அதில் சில மதீனா அன்சாரி வாலிபர்கள் பங்கீடுபற்றி குறை சொன்னார்கள். பெருமானார் (ஸல்) அவர்களை அழைத்துப் பேசினார்கள். பெருமானார் பேச்சைக் கேட்டு அன்சாரிகள் தவறை உணர்ந்து தேம்பித் தேம்பி அழுதார்கள்.

## ஆச்சரியமான அர்ப்பணம்

இந்த யுத்தத்தில் கைது செய்தவர்களை விடுவிக்க வேண்டும் என்று ஒரு குழுவினர் வேண்டினார்கள். 6 ஆயிரம் கைதிகள் விடுவிக்கப்பட்டார்கள்.

## தபூக் யுத்தம்

ரோம் நாட்டவர் சண்டைக்கு வந்துள்ளார்கள் என செய்தி பரவியது. 30 ஆயிரம் நபர் கொண்ட படையுடன் நபிகளார் தபூக் புறப்பட்டனர். செய்தி தவறு என தெரிந்தது. அங்குள்ள கிறிஸ்தவர்களிடம் ஒப்பந்தம் செய்து திரும்பினார்கள்.

## ஹஜ் கடமை

ஹிஜ்ரீ 9ல் ஹஜ் கடமையானது. ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களை தலைவராக்கி 30 ஸஹாபாக்களை ஹஜ்ஜுக்கு அனுப்பி வைத்தார்கள்.

## இறுதி ஹஜ்

ஹிஜ்ரீ 10-ல் துல்கஃதா மாதம் நபிகளார் ஹஜ்ஜு செய்ய புறப்பட்டார்கள். 1 ஒரு லட்சம் நபர்களுடன் இருந்தார்கள். ஹஜ்ஜில் அரஃபா மைதானத்தில் நம் நபி உரையாற்றினார்கள்.

## மரணம்

ஹஜ்ஜிலிருந்து வந்து ஹிஜ்ரீ 11 ஸபர் மாதம் 9ல் திங்களன்று நோய்வாய்ப்பட்டார்கள், ரபீஉல்அவ்வல் 12 ஹிஜ்ரீ 11 திங்கள் 63 வயது பூர்த்தியாகி 64 வது வயது ஆரம்பமாகி 5 ஐந்து நாள் ஆனது. ளுஹர் நேரம் மரணமானார்கள். (இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்).

## நம் நபியின் உருவத் தோற்றம்

நம் நபி மிகவும் அழகானவர்கள் - நடுத்தர உயரம், சிவப்பும், வெள்ளையும் கலந்த ஒரு நிறம். அகன்ற நெற்றி. திடமான குரல், கருத்தக் கண், பெரிய பெரிய இமைமுடி. பௌர்ணமி இரவில்

தென்படும் முழுசந்திரனைவிட நபிகளாரின் முகம் அழகாக இருந்தது என ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

## பேச்சு

பெருமானார் பெரும்பாலும் மௌனமாக இருப்பார்கள். அவசியம் ஏற்படும்போது பேசுவார்கள். புரியும்படி அவசரப்படாமல் பேசுவார்கள். தேவை ஏற்பட்டால் சில விஷயத்தை மூன்று தடவைகூட கூறுவார்கள். முத்துக்கோர்வை போல் பேச்சு அமைந்திருக்கும். கேட்பவர்கள் மனதில் பதிய வைத்துக் கொள்ள முடியும். கேட்க இனிமையாக இருக்கும்.

## ஒழுக்கம்

1. சபைகளில் காலை விரித்து உட்காரமாட்டார்கள்.

2. முந்திக்கொண்டு ஸலாம் சொல்வார்கள்.

3. முஸாபாஹா செய்ய தானாக கையை நீட்டுவார்கள்.

4. ஒருவர் பேச துவங்கினால் (நான் சொல்வதை கேளுங்கள் என) துண்டிக்க மாட்டார்கள்.

5. நபில் தொழுது கொண்டிருக்கும் போது யாரும் சந்திக்க வந்திருப்பதாக உணர்ந்தால் தொழுகையை சுருக்கிக்கொள்வார்கள்.

## சிரிப்பும், அழுகையும்

நம் நபி எப்போதும் வெடிச் சிரிப்பு சிரித்ததில்லை. புன்முறுவல் பூப்பதுதான் வழக்கம், தஹஜ்ஜத் தொழுகையில் பெரும்பாலும் அழுவார்கள். நல்ல நண்பர்களின் மரணத்தினால் கண்ணீர் விடுவார்கள். அவர்கள் குழந்தை இப்ராஹீம் (ரலி) மரணமாகிவிட்டார். கப்ரில் அடக்கும் போது அழுதார்கள்.

அப்பொழுது சொன்னார்கள். கண் கசிகிறது; உள்ளம் கவலையில் உள்ளது. ஆனால் அல்லாஹ்வின் நாட்டத்தை பொருந்திக் கொள்கிறேன் என்றார்கள். ஒரு முறை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் குர்ஆன் ஓதுவதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு வசனம் வரும்போது நிறுத்துங்கள் என்றார்கள். பார்த்தபோது பெருமானாரின் கண் கசிந்து கொண்டிருந்தது.

## உணவு

தங்களுக்கு காடி, தேன், ஹல்வா, ஜைதூன் எண்ணெய், சுரக்காய் மிகப்பிடிக்கும். ஒருமுறை ஹஜ்ரத் ஹஸன் (ரலி), ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) இருவரும் ஹஜ்ரத் உம்முசலமா (ரலி) வீட்டிற்குச் சென்று நபிகளாருக்கு ரொம்ப பிடித்த உணவை சமைத்து எங்களுக்குத் தாருங்கள் என்றனர். உம்முசலமா அது உங்களுக்கு பிடிக்காது என்றார்கள். அவர்கள் மிகவும் வற்புறுத்தியதால் கோதுமை மாவை சட்டியில் போட்டு - ஜைதூன் எண்ணை ஊற்றி சீரகம், மிளகு போட்டு கிளறி எடுத்து முன் வைத்தார்கள்.

துற் வாடை நபிக்கு பிடிக்காது. பச்சை வெங்காயம், பூண்டு, சமைக்காத முள்ளங்கி ஆகியவற்றைச் சாப்பிட்டு விட்டு பள்ளிக்கு வர வேண்டாம் எனக்கூறினார்கள். பிறருக்கு நோவினை தரும் எதுவும் பள்ளியில் நடைபெறுவதை தடுப்பார்கள். புத்தி சுவாதீனமில்லாதவர்கள் பள்ளிக்கு வராமல் பார்த்து கொள்ள சொன்னார்கள். வெள்ளி தோறும் பள்ளியில் நறுமணப் பொருள்களின் புகை போடப்படும். தெருவில் சிறுநீர் கழிக்காதீர்கள் என கட்டளையிட்டனர். மரத்தடியில் சிறுநீர் கழிப்பதை தடுத்துள்ளனர். சோம்பலால் வெளியே வராமல் அறைக்குள்ளேயே பாத்திரங்களில் சிறுநீர் கழிப்பதை தடுத்துள்ளனர்.

## அன்றாட செயல்கள்

சுபுஹ் தொழுதுவிட்டு மக்களுக்கு உரையாற்றுவார்கள். கனவுக்கு பலன் கூறுவார்கள். சூரிய உதயமானதும் வீடு செல்வார்கள். துணி தைப்பது, பால் கறப்பது போன்ற சுய வேலைகளை இருந்தால் செய்வார்கள். இரவுக்குப்பின் வீண் பேச்சு பேசமாட்டார்கள். சாதாரண விரிப்பில் தூங்குவார்கள். சமயங்களில் பாய், தோல், தரையில் படுப்பார்கள். படுப்பதற்கு முன் சிறிது குர்ஆன் ஓதுவார்கள். பிந்திய இரவில் எழுந்து பல் துலக்கி ஒளுசெய்து 8 ரக்அத்கள் நபில் தொழுவார்கள். சமயங்களில் கால் சுரந்து விடும் அளவு இரவு முழுவதும் வணங்குவார்கள்.

## சந்திப்பு

யாரையும் சந்தித்தால் முந்திக் கொண்டு சலாம் சொல்வார்கள். முஸாபஹா செய்வார்கள். முகம் கொடுத்து பேசுவார்கள். வீட்டிற்கு யாரேனும் வந்தால் வாசலின் ஓரத்தில் நின்று ஸலாம் கூறி பெயர்கூறி அனுமதி பெற்றபின் உள்ளே வரச் சொல்வார்கள். நம் நபியும் யாரின் வீட்டிற்கு சென்றாலும் இப்படியே நடப்பார்கள். அனுமதி கிடைக்காவிட்டால் திரும்பி வந்துவிடுவார்கள். யாருடைய வீட்டுக்குள்ளும் கூர்ந்து பார்க்கக் கூடாது என்பார்கள்.

## பணிவிடை செய்பவர்கள்

நம் நபியுடைய ஓர் பணியாளர் ஹள்ரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி). இவர்கள் நம் நபியிடம் கேட்டு கேட்டு 70 சூராக்கள் மனனம் செய்துவிட்டார்கள். அவர்கள் நம் நபியுடன் பயணத்தில் உடன் இருப்பார்கள். ஒழு, மிஸ்வாக், பாதணி அணிவித்தல், தூங்குவதற்கு ஏற்பாடு செய்தல், தெருவில் முன் செல்லுதல் போன்ற பணிகள் செய்வார்கள். ஹள்ரத் பிலால் (ரலி) அவர்கள் பாங்கு சொல்வது, பெருமானாரின் வீட்டு நிர்வாகம், கடை

வீதியிலிருந்து பொருள் வாங்கி வருதல், கடன் வாங்குதல், கொடுத்தல் போன்ற பணி செய்தார்கள். ஹள்ரத் அனஸ் (ரலி) பத்தாண்டுகள் பணிவிடை செய்தார்கள். சிறிய வேலைகள், நீர் கொண்டு வருவது போன்ற வேலை செய்வார்கள். ஒருநாள் நபிகளார் யா அல்லாஹ்! அனஸிற்கு நிறைய பொருளையும் பிள்ளைகளையும் கொடு! அதில் பரகத் செய் என துஆச் செய்தார்கள்.

## பழக்கங்கள்

வலது பக்கம் நபிகளாருக்கு மிகவும் பிடிக்கும். பள்ளியில் நுழையும் போது வலது காலை முன் வைப்பார்கள். செருப்பணியும் போது வலதை முற்படுத்துவார்கள். ஒரு காரியத்தைத் துவங்கும்போது பிஸ்மில்லாஹ் சொல்வார்கள்.

## பலகீனமானவர்களை கவனித்தல்

தங்களின் மனைவி ஹள்ரத் சஃபிய்யா ஒரு முறை பயணத்தில் பெருமானாரின் ஒட்டகத்தின் மீது ஏறும்போது தவறி விழுந்து விட்டார்கள். இதை பார்த்த ஹள்ரத் அபூதல்ஹா ஓடி வந்தார்கள். அப்பொழுது முதலில் சஃப்பிய்யாவை கவனியுங்கள் என்றார்கள்.

## இரக்கம்

நபி பெருமானார் தன் சொந்த விஷயத்திற்காக யாரிடமும் பழி வாங்கியதில்லை என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர். பெருமானார் (ஸல்) விரோதிகளுக்கு கூட பத்துஆ செய்தததில்லை. நான் சாபமிட நபியாக வரவில்லை. நான் அருளாக அனுப்பப்பட்டுள்ளேன் என்பார்கள். விரோதிகள் தொல்லை தந்தபோது யாஅல்லாஹ் எனது இந்த சமுதாயத்திற்கு வழிகாட்டு. இவர்கள் என்னை அறிய வில்லை என்றுதான் துஆ செய்தார்கள்.

ஒரு தடவை மரத்தடியில் பெருமானார் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கையில் ஒரு விரோதி வாளை எடுத்து கொல்ல வந்தான். யார் இப்பொழுது உம்மை பாதுகாப்பது என்றான். அல்லாஹ் என்றார்கள். அவன் பயந்து போய் கீழே சாய்ந்தான். பெருமானார் வாளை எடுத்து எம்மிடமிருந்து உம்மை பாதுகாப்பது யார் என்றார்கள். அவன் விழித்தான். நபிகளார் அவனை மன்னித்துவிட்டு விட்டார்கள். ஒருதடவை தங்களின் மகள் ஜைனபின் மீது ஒருவன் ஈட்டியால் குத்தினான். இதனால் ஒட்டகத் தொட்டியிலிருந்து கீழே விழுந்து மரணமாகிவிட்டார்கள். அந்த மனிதன் நபிகளாரிடம் வந்து மன்னிப்புக் கேட்டான். நபிகளார் மன்னித்து விட்டார்கள். பிறருக்கு இரக்கம் காட்டாதவன் மீது இரக்கம் காட்டப்படாது என்று அருளினார்கள்.

## பொறுமை

ஒருதடவை கடன் கொடுத்தவன் ஒருவன் பெருமானாரிடம் வந்து புஜத்திலிருந்த சால்வையை எடுத்துக்கொண்டான். மேலங்கியைப் பிடித்து உங்களின் வம்சம் கடன் வாங்கினால் கொடுப்பதில்லை என்றான். இதைக் கண்ணுற்ற ஹளரத் உமர் (ரலி) அவனைக்கண்டித்தார்கள். பெருமானார் இதை பார்த்து புன்முறுவல் பூத்து சொன்னார்கள் உமரே! என்னிடம் கடனை கொடுத்து விடும்படியும், அவனிடம் மென்மையாகக் கேட்கும் படியும் கூறியிருக்க வேண்டும். கடனைத் தர இன்னும் மூன்றுநாள் பாக்கியிருந்தது என ஹளரத் உமரிடம் கூறி இந்தக் கடனை நிறைவேற்றி விடுங்கள். கொஞ்சம் அதிகப்படுத்திக் கொடுங்கள் என்றார்கள். ஒரு தடவை ஒரு கிராமவாசி நபிகளாரின் பின்பக்கம் வந்து மேலே இருந்த சால்வையை இழுத்தார். இதனால் கழுத்தில் இறுக்கம் ஏற்பட்டு அடையாளம் பட்டுவிட்டது. பிறகு அந்த கிராமவாசி "முஹம்மத்! இந்தப் பொருள் உம்முடையதோ உமது தந்தையுடையதோ அல்ல. அல்லாஹ் உடையது. அதிலிருந்து

எனக்கு ஒட்டகம் நிறைய தாருங்கள் என்று சொன்னார். இதைக் கேட்டு நபிகளார் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு சொன்னார்கள். சந்தேகமின்றி இது அல்லாஹ்உடைய பொருள்தான். நானும் இறைவனின் அடிமைதான் என்றார்கள். இதற்கு பிறகு அவருக்கு கோதுமை, பேரித்தம் பழம் ஒரு ஒட்டகச்சுமையளவு கொடுத்தார்கள். நம் நபி தஃவத் பணிக்கு தாயிப் சென்ற போது அங்குள்ளவர்கள் தங்களின் மீது கற்களை விட்டு எறிந்தனர். அதனால் மேனியிலிருந்து இரத்தம் வந்தது. மயக்கமுற்றார்கள். அப்பொழுது கூட பெருமானார், யா அல்லாஹ்! இவர்களை அழித்து விடாதே! இவர்கள் ஈமான் கொள்ளாவிட்டாலும் இவர்களின் பிச்சளங்கள் ஈமான் கொள்ளலாம் என்று கூறினார்கள்.

## அன்பு

முழுஉலகிற்கும் அருளாக நம் நபி அனுப்பப்பட்டார்கள். சாதி, மொழி, நிறம், நாடு என்ற பாகுபாடு இருக்கக்கூடாது எனக்கூறி அனைவரும் லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்ற மூல மந்திரத்தைக் கூற வேண்டும் என பாடுபட்டார்கள். இதன் பயனாக கஃபாவின் திறவு கோலை வைத்திருந்த உஸ்மான் இப்னு தல்ஹா, யூத அறிஞர் அப்துல்லாஹ் இப்னு சலாம், எல்லா வேத நூல்களையும் அறிந்து வைத்திருந்த ஹிர்மா, நெருப்பை வணங்கிக் கொண்டிருந்த சல்மான் ஃபார்ஸி உஹதில் முஸ்லிம்களை தோற்கடித்த காலித், செல்வத்தில் வளர்ந்த துன்னஜாதைன் போன்றோர்கள் முஸ்லிமாகிவிட்டார்கள். எல்லா முஸ்லிம்களும் சகோதர பாசத்துடன் உள்ளனர். பெருமானார் நமக்கு பல நல்ல போதனைகளை அருளியுள்ளனர். பெற்றோர்களை மதித்து நடந்து கொள்ளுங்கள், மது அருந்தாதீர்கள். சூதாட்டம் கூடாது. எல்லாருக்கும் ஸலாம் சொல்லுங்கள். உறவினர்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் தஹஜ்ஜுத் தொழுங்கள் என்று அருளினார்கள்.

## 15 விஷயங்கள்

ஒரு முறை 7 பேர் கொண்ட குழு பெருமானாரின் சமூகம் வந்தது. நீங்கள் யார் என்று கேட்டதற்கு நாங்கள் முஸ்லிம்கள் நாங்கள் ஐந்து விஷயத்தை நம்பியுள்ளோம் ஐந்து விஷயத்தின்படி செயல்படுகிறோம் நாங்கள் ஏற்கனவே ஐந்து விஷயத்தை கடைபிடித்து வருகிறோம் என்றனர்

**நம்பிய ஐந்து விஷயம்...**

1. அல்லாஹ் 2. வானவர்கள் 3. வேதங்கள் 4. தூதர்கள் 5. மரணத்திற்கு பிறகு எழுப்பப்படுதல்

**செயல்படும் ஐந்து விஷயம் :**

1. கலிமா சொல்வது 2. தொழுவது 3. ஐகாத் கொடுப்பது 4. நோன்பு வைப்பது 5. ஹஜ் செய்வது.

**ஏற்கனவே கடைபிடித்த ஐந்து விஷயம் :**

1. அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவது 2. துன்பத்தில் பொறுமை கொள்ளுதல் 3. இறை விதியை பொருந்திக் கொள்வது 4. சோதனை வந்தாலும் உறுதியாகயிருப்பது 5. நம்மை பார்த்து விரோதிகள் சிரிக்கா வண்ணம் நடந்து கொள்வது என்றார்கள்.

இதைக் கேட்ட நபிகளார் சொன்னார்கள். இதை உங்களுக்கு கூறியவர் ஒரு மதிநுட்பம் உள்ள அறிஞராகத்தான் இருக்கக்கூடும். நான் இன்னும் ஐந்து விஷயம் கூறுகிறேன் அதையும் செயல்படுத்துங்கள்.

1. உணவுப் பொருளை பதுக்காதீர்கள்

2. தேவையில்லாத அளவு வீடு கட்டாதீர்கள்

3. சண்டை சச்சரவு செய்ய வேண்டாம்

4. மறுமைக்காக செயல்படுங்கள்

5. அல்லாஹ்வைப் பயப்படுங்கள்

## சில அறிவுரைகள்

ஹிஜ்ரீ 1ல் ஹஜ்லான் என்ற வம்சத்தை சேர்ந்த ஒரு குழு பெருமானாரிடம் வந்த போது பல விஷயம் சொன்னார்கள் அதில் சில 1. வாக்கு மாறக் கூடாது 2. நம்பிக்கை துரோகம் செய்யக்கூடாது 3. அண்டை வீட்டாரிடம் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும் 4. யாருக்கும் அநீதி செய்யக்கூடாது என்பதாகும்.

## இன்னும் சில உபதேசம்

1. பெற்றோர்களுக்கு பணிவிடை செய்ய வேண்டும்.

2. கோபத்தை அடக்குபவன் தான் வீரன்.

3. உயிரினங்களுக்கு உதவியாகயிருக்க வேண்டும். ஒருவன் தாகித்த நாய்க்கு நீர் கொடுத்தார். அதனால் அல்லாஹ் அவரை மன்னித்தான்.

**4. கீழுள்ள நான்கு தன்மைகள் உள்ளவன் நயவஞ்சகனாகும் :**

1. பொய் பேசுவது 2. வாக்கு மாறுசெய்வது 3. நம்பிக்கை துரோகம் செய்வது 4. வாய்தகராறின் போது கெட்ட வார்த்தை கூறுவது.

5. தொழுகை அதன் நேரத்தில் நிறை வேற்றவேண்டும்

6. அவர்களைப்போல் நாமும் ஆக வேண்டும் என ஆசை வைக்கலாம்.

1. ஓர் செல்வந்தன் தன் செல்வங்களை நல்ல வழியில் செலவு செய்கிறான்.

2. ஓர் கல்விமான் கற்ற கல்வியின்படி செயல் படுகிறார். மற்றவர்களுக்கும் கற்றுக்கொடுக்கிறார்.

## உடல் ஆரோக்கியங்கள்

1. இரவில் பசியாக தூங்காதீர்கள். இதனால் விரைவில் முதுமை ஏற்படுகிறது 2. சாப்பிட்டவுடன் தூங்கக்கூடாது. 2. அளவாக உண்ண வேண்டும். 3. ஹராமான பொருளில் அல்லாஹ் சுகத்தை வைக்கவில்லை 4. மது அருந்துவது நோயை உருவாக்கும் 5. இரு விஷயத்தை மதிக்க வேண்டும் 1. உடல் நலம் 2. ஓய்வு

## நலம் விசாரித்தல்

யாரும் நோய்வாய்ப் பட்டால் நம் நபி சென்று நலம் விசாரிப்பார்கள். ஆறுதல் கூறுவார்கள். இன்ஷா அல்லாஹ் இந்த நோய் உங்களின் பாவங்களைப் போக்கிவிடும் என்பார்கள். நோயாளி ஏதாவது உண்ண விரும்பினால் அது அவருக்கு தீங்களிக்காது என்று இருந்தால் அதை அவருக்கு உண்ணக் கொடுங்கள் என்பார்கள். நோயாளியிடம் நீங்கள் இன்னும் ரொம்ப காலம் இருப்பீர் என்று கூறுங்கள். அதனால் அவருக்கு சந்தோஷம் ஏற்படும் என்பார்கள்.

## பெயர்

நல்ல பெயர்களை விரும்புவார்கள். தீய பெயர்களை வைக்காதீர்கள் என்று கூறுவார்கள். அப்துர்ரஹ்மான், அப்துல்லாஹ் போன்றவை அல்லாஹ்வுக்கு மிக பிரியமானதாகும் என்றார்கள். ஒரு பெண் ஆஷியா என்று பெயர் வைத்திருந்தார். அதற்கு மாறுசெய்பவள் எனப் பொருள். அப்பெயரை மாற்றி ஜமீலா அழகிய பெண் என பெயரிட்டார்கள்.

## ஸலாம்

மிஸ்கீன்களுக்கு உணவு வழங்குங்கள். ஸலாத்தை பரத்துங்கள்.

இம்மூன்று தன்மை உள்ளவன் ஈமானுடையவன் 1. தனக்கு நீதமாக நடப்பது 2. எல்லாருக்கும் ஸலாம் கூறுவது 3. சிரமத்திலும் இறைவழியில் செலவு செய்தல்.

தெருவில் செல்லும் போது பிள்ளைகளுக்கு ஸலாம் சொல்லுவார்கள். சிறுவர்கள் பெரியவர்களுக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும் ஸலாம் கூறுங்கள் என்றார்கள்.

## பிறருக்கு உதவியாக இருப்பது

கப்பாப் என்ற ஸஹாபி ஒரு யுத்தத்திற்கு சென்று இருந்தார்கள். அவர்களின் இல்லத்தில் வேறு ஆண்கள் இல்லை. பெண்களுக்கு பால் கறந்து கொடுத்தார்கள். ஒரு கிராம வாசி ஒரு தடவை பெருமானார் (ஸல்) அவர்கள் பள்ளியில் தொழுது கொண்டிருக்கும் போது சென்று எனக்கு ஒரு வேலை தாங்கள் மூலம் ஆக வேண்டும். முதலில் அதைச் செய்து விட்டு பிறகு வந்து தொழுங்கள் என்றார். உடனே நம் நபி பள்ளியிலிருந்து வெளியே சென்று வேலையை முடித்து கொடுத்துவிட்டு திரும்பினார்கள்.

## சுய வேலைகள்

ஒரு தடவை பெருமானார் (ஸல்) அவர்கள் ஒட்டகத்திற்கு தன் கையால் எண்ணெய் தேய்த்தார்கள். ஒரு தடவை பயணத்தில் ஸஹாபாக்கள் ஆடு அறுத்து சமைக்க நாடினார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையை செய்யலானார்கள். நபி பெருமானார் காட்டுக்குச்சென்று விறகு கொண்டுவந்தார்கள். தன் செருப்பை

தானே தைப்பார்கள். ஒரு தடவை வீட்டை சீர் செய்து கொண்டிருந்தார்கள். சில ஸஹாபாக்களும் அதில் சேர்ந்து உதவினார்கள். நபிகளார் அவருக்கு துஆ செய்தார்கள்.

## நற்குணம்

ஹள்ரத் ஜாபிர் (ரலி) ஒரு யூதனிடம் கடன் வாங்கியிருந்தார்கள். இரு வருடங்களாக பேரீத்த விளைச்சல் இல்லாததால் கடன் திருப்பி கொடுப்பதில் தாமதம் ஏற்பட்டது. மீண்டும் அவகாசம் தர யூதன் மறுத்து விட்டான். ஹள்ரத் ஜாபிர் நம் நபியிடம் வந்து விவரத்தை கூறினார். உடனே நபிகளார் அந்த யூதனிடம் இருமுறை சென்று பேசியும் அவகாசம் தரமறுத்துவிட்டான். உடனே நபிகளார். ஜாபிருடைய தோட்டத்தில் அமர்ந்து மரத்தில் பேரித்தம்பழம் இருக்கும். பறித்து கடனை கொடு! என்றார்கள். அவரும் அப்படியே செய்தார். ஒரு தடவை தாங்கள் மாமிசம் பங்கு வைத்துக்கொண்டிருந்தார்கள். ஒரு பெண்மணி வந்தார். பெருமானார் அவருக்கு தன் சால்வையை விரித்து அமரச் சொன்னார்கள். மிக மரியாதையாக நடந்து கொண்டனர். அங்கிருந்தவர்கள் யார் என கேட்டதற்கு எனது செவிலித்தாய் என்றார்கள்.

ஒருமுறை ஹள்ரத் அபூதர் என்ற சஹாபியை கூப்பிட விட்டார்கள். அவர் வீட்டுக்கு வந்தபோது நம் நபி எழுந்து முஆனகா செய்தார்கள்.

## உடற்பயிற்சி

நம் நபி தன் தோழர்களிடம் உடற்பயிற்சியின் ஆர்வத்தை ஊட்டுவார்கள். அரபு நாட்டின் ஒரு பிரபல வீரர் ருகானா. அவர் நம் நபியை பார்த்து என்னை நீங்கள் மல்யுத்தத்தில் தோற்கடித்து விட்டால் நான் முஸ்லிமாகி விடுகிறேன் என்றார். நம் நபி அவரை

மும்முறை தோற்கடித்தனர். உடனே அவர் முஸ்லிமாகிவிட்டார். குறிவைத்து அம்பு எய்யும் பயிற்சியும் நடத்துவார்கள்.

## வீட்டுக்குள்ளே

நம் நபி வீட்டில் எப்படி இருப்பார்கள் என ஒருமுறை ஒரு மனிதர் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டபோது அவர்கள் வீட்டு வேலை செய்வார்கள், பால் கறப்பார்கள், வீட்டுக்கு பொருள் வாங்கி வருவார்கள். ஆடை தைப்பார்கள். தோலினால் ஒட்டுப் போடுவார்கள். ஒட்டகத்திற்கு தீனி போடுவார்கள் என்று கூறினார்கள்.

## பிள்ளைகளுடன்

நம் நபி பிள்ளைகளுடன் அன்பாக இருப்பார்கள். சிறியோர்களின் மீது அன்பு காட்டாதவன், பெரியோர்களுக்கு மரியாதை செய்யாதவன் உண்மை முஸ்லிம் அல்ல என சொன்னார்கள்! நம் நபி பிள்ளைகளுக்கு ஸலாம் கூறுவார்கள். தன் வாகனத்தின் மீது ஏற்றி கொள்வார்கள். புத்தாடை உடுத்தியிருப்பதை கண்டால் மிக நன்றாக உள்ளது என்பார்கள். உம்மு கைஸ் என்ற பெண்மணி கூறுவதாவது ... நான் எனது மகனை கூட்டிக்கொண்டு பெருமானாரிடம் சென்றேன், அப்பொழுது என்மகனை தூக்கி கொண்டார்கள். அவன் சிறுநீர் கழித்துவிட்டான். தண்ணீர் வாங்கி கழுவிக் கொண்டார்கள்.

ஹள்ரத் அனஸ் (ரலி) நபி பெருமானாருக்கு 10 வருடம் பணிவிடை செய்பவராக இருந்தனர். அவர்கள் கூறுவது ஒருதடவை நபிகளார் என்னை ஒரு வேலைக்காக அனுப்பி வைத்தனர். நான் தெருவில் செல்லுபோது பிள்ளைகள் விளையாடுவதைப் பார்த்து நானும் சேர்ந்து கொண்டேன். பெருமானார் அங்கு வந்து என்னை பிடித்து கேட்டார்கள். இதோ - அந்த வேலைக்கு செல்கிறேன்

என்றேன். ஒரு சஹாபி கூறுவது நான் சிறுவயதில் ஒரு அன்சாரி சஹாபியின் பேரீத்தம்பழம் தோட்டத்திற்கு சென்று கல்லால் எறிந்து பேரீத்தம்பழம் பறித்து சாப்பிடுவேன். ஒருநாள் அந்த தோட்டக்காரர் என்னை பிடித்து பெருமானாரிடம் அழைத்துச் சென்றார். பெருமானார் விசாரித்து விட்டு இனி இப்படிச் செய்யாதே என்று என்னிடம் கூறினார்கள். ஒரு பெண் தன் இரு கைக் குழந்தையுடன் அன்னை ஆயிஷா (ரலி) யிடம் வந்து யாசகம் கேட்டார். அப்பொழுது அன்னை ஆயிஷாவிடம் ஒரே ஒரு பேரீத்தம் பழம் தான் இருந்தது. அதை அப்பெண்ணிடம் கொடுத்துவிட அவர் அதை இரு துண்டாக்கி இரு பிள்ளைகளுக்கும் கொடுத்தார். இதை நம் பெருமானாரிடம் அன்னை ஆயிஷா கூறியபோது நம் நபி சொன்னார்கள் எந்த தாய் தன் பிள்ளைகளின் மீது அன்பு காட்டி அவர்களுக்குரிய கடமைகளை நிறைவேற்றினால் நரகிலிருந்து தற்காத்துக்கொள்ளலாம். நம் நபி சொன்னார்கள். தொழுகையை நீட்ட வேண்டும் என்றுதான் நினைக்கிறேன் குழந்தைகளின் அழுகை சப்தத்தை கேட்டால் உடனே தொழுகையை சுருக்கிக் கொள்கிறேன். குழந்தை பிறந்தால் சஹாபாக்கள் நபிகளாரிடம் கொண்டு வருவார்கள். நம் நபி குழந்தையின் தலையில் தடவி பேரீத்தம் பழத்தை நன்றாக மென்று வாயில் வைத்து - பரக்கத்திற்கு துஆ செய்வார்கள். யுத்தத்தில் குழந்தைகளை கொன்றுவிடாதீர்கள் என்று சொல்வார்கள். பேரீத்தம்பழத்தை அறுவடை ஆனதும் முதலில் நம் நபிக்கு சஹாபாக்கள் கொண்டு வந்து அன்பளிப்பு செய்வார்கள். அதை வாங்கி முதலில் அங்குள்ள பிள்ளைகளுக்கு பெருமானார் கொடுப்பார்கள். நம் நபி குழந்தைகளை பாசத்தில் முத்தமிடுவார்கள். இதைப்பார்த்த ஒருவர் சொன்னார் எனக்கு பத்து பிள்ளைகள் உள்ளனர். ஒருவரை கூட முத்தமிட்டதில்லை. அவர்கள் மதீனா சென்ற போது அன்சாரி பெண் பிள்ளைகள் மகிழ்ச்சியால் கவிபாடி வரவேற்றார்கள். பெருமானார் அவர்களிடம் பிரியம் காட்டினார்கள். அனஸ் உடைய தம்பி அபூஆமிர் சிறுவயதில் ஒரு மைனா

வளர்த்தார். ஒருநாள் அது இறந்துவிட்டது. இதனால் அபூ ஆமிர் கவலையாக இருந்தார். இதைப்பார்த்த பெருமானார் அவரை நகைச்சுவையாக பேசி மகிழ்ச்சிப்படுத்தினார்கள். நபிகளார் தன் பேத்தி உமாமா வை புஜத்தில் தூக்கி வைத்துக் கொள்வார்கள். பேரர் ஹஸன், ஹூஸைன் மீது பாசமாக இருப்பார்கள்; தூக்குவார்கள், கொஞ்சுவார்கள். தன் மகன் இப்ராஹீமை தூக்கி கொஞ்சுவார்கள்.

## முடிவுரை :

இதுவரை நம் நபியின் வாழ்க்கை வரலாறு பற்றி அறிந்தோம். நாமும் அவர்களைப் போன்று நற்குணத்துடன் முன்மாதிரியாக வாழ வேண்டும். அவர்கள் நபியாவதற்கு முன் வியாபாரம் செய்து சம்பாதித்தார்கள். நபியான பிறகு தன் முழு வாழ்வையும் தஃவத் பணிக்காக குர்ஆன், ஹதீஸை இஸ்லாத்தை பரத்த முயன்றார்கள். இதற்காக பல கஷ்டங்களை சகித்தார்கள். பத்துஆ செய்யவில்லை. மன்னிக்கும் மனம் உள்ளவர்களாகத் திகழ்ந்தார்கள். அன்பு தான் அவர்களின் சின்னம். வீரராக இருந்தார்கள். கல்வியை மதிப்பார்கள். பணிவு இருந்தது. மரணமாகும்போது தொழுகையை கட்டுப்பாட்டுடன் நிறைவேற்றச் சொன்னார்கள். அருமைப் பிள்ளைகளே!

உங்கள் உள்ளத்தில் பெருமானாரின் அன்பை உருவாக்குங்கள், அவர்களின் வாழ்வை தெளிவாக அறிந்து அதன்படி நடக்க உறுதி எடுங்கள்.

முஸ்லிமாக வாழ்ந்து முஸ்லிமாகவே மரணமாக உறுதிமொழி கூறுங்கள். அல்லாஹ் எனக்கும் உங்களுக்கும் நம் நபியின் அன்பை தந்து அருள் புரிவானாக! ஆமீன் ...

ஸல்லல்லாஹு அலன் நபிய்யிர்ரஹ்மா வஸல்லம்.



## இமாம் கஜ்ஜாலீ (ரஹ்) கூறும் வாராந்திர அமல்

வெள்ளி : اَللّٰهُ هُوْ 10 தடவை ஓதினால் சிரமம் நீங்கும்

சனி: لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ 100 தடவை ஓதினால் கவலை நீங்கும்

ஞாயிறு: يَا حَيُّ يَا قَيُّوْمُ 1000 தடவை ஓதினால் மறைமுக உதவி கிடைக்கும்

திங்கள்: يَا حَيُّ يَا قَيُّوْمُ 1000 தடவை ஓதினால் பொருளாதார விருத்தி ஏற்படும்

செவ்வாய்: ஸலவாத் [illegible]0 தடவை ஓதினால் பலா-முஸீபத் நீங்கும்

புதன்: اَسْتَغْفِرُ اللّٰهَ 1000 தடவை ஓதினால் கப்ருடைய வேதனையிலிருந்து பாதுகாப்பு கிடைக்கும்

வியாழன்: لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ الْمَلِكُ الْمُبِيْنُ 1000 தடவை ஓதினால் ஈமான் பலமாகும்.

ஆதாரம்: கலாமுத்தீன் சாஹிப் (பனாரஸ்)